உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# திருப்புத்தூர்ப்புராணம்.



இது

ஸ்ரீவன்றொண்டரவர்கள்

மாணுக்கருள் ஒருவரும்,

காரைக்குடி.

ராம - கு - இராமநாதச்செட்டியார்

குமாரருமாகிய

சொக்கலிங்கச்செட்டியார்

இயற்றியது.



பள்ளத்தூர்

க. ப. குமரப்பசெட்டியார்

கேட்டுக்கொண்டபடி,

சென்னை:

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலையில்

அச்சிடப்பட்டது.

விளம்பிஞு ஆவணிமீ.

சிவமயம்.

# சிறப்புப்பாயிரங்கள்.

ஸ்ரீ*கடோரகிரிநிவாசவைசியகுலாசாரிய
பாண்டிமண்டலராசகுரு

## ஸ்ரீஈசானசிவாசாரியரவர்கள்

இயற்றியது.

பொன்னிறமாலுங்கமலத்தயனுங்காணுப்
புண்ணியனுறெண்ணுநடம்புரிந்துபோற்றும்
வன்னமலைதருமமலைகமலைகாண
மாகௌரிநடஞ்செய்தருண்மகிமைவாய்ந்த
தின்னிலையபரியங்கயோகியாகி
யென்றும்வடுகேசனமர்ந்தியற்றுகாவன்
மன்னுவதுமழுக்கழுமுளிரண்டிணைய
மலர்வாவியோரிரண்டுவயங்குமூதூர். (௧)

மும்மலருநின்மலருமுறையிற்சூட்டு
முடிமலரோடருண்மலருமுகங்களான
வைம்மருமம்மலர்மேலாகத்தோன்று
மைம்மூன்றுகண்மலருமையிரண்டு
கைம்மலருங்கௌரிதிருக்கண்ணுளாருங்
கான்மலருங்காணநடமாடுமன்றிற்
செம்மலிருந்தருள்புரிந்தேயெமைவாழ்விக்குந்
திருப்புத்தூர்வடமொழிமான்மியத்தையாய்ந்தே. (௨)

நிகழுலகத்தவர்விம்பப்பிரதிவிம்ப
நியாயத்திற்கிலக்கியம்யாங்கண்டோமென்னப்
புகலுறத்தென்மொழிக்கவியாலியற்றியீக்கள்
புதுமலரின்மதுக்கள்கொணர்ந்தொருங்குகூட்டி
மிகுதிபெறக்காட்டலெனவான்ருேர்கூறும்
விதியெழுத்துச்சொற்பொருளியாப்பணியெலாமோர்
முகமதனிற்றெருகுத்திந்தப்புராணஞ்சொன்ருன்
மூதறிவோன்சொக்கலிங்கவணிகன்மாதோ. (௩)

---

* கடோரகிரி - பிரான்மலையென்றுவழங்கும்கொடுங்குன்றம்.

திருக்கைலாயபரம்பரைத்

திருவண்ணாமலையாதீனத்துவித்வான்

## ப்ரம்மஸ்ரீ கணேசபண்டிதரவர்கள்

இயற்றியது.

---

கருப்புத்தூர்க்கிற்குமேன்மைகவினுமெய்த்தலமாயோங்குந்
திருப்புத்தூர்மான்மியத்தைச்செந்தமிழாக்கியீந்தா
னுருப்புத்தூர்க்காரைச்சொக்கலிங்கவேளுரவோன்சைவ
விருப்புத்தூரிவருஞ்சீலன்விடையவர்வீறுதோன்ற.

---

திருநெல்வேலி

அரிகேசவநல்லூர்

## அரிகரபாரதிகள்

இயற்றியது.

---

இரதமுறுநான்குவிதகவியுரைக்கும்பாவலர்க்குமிமையோர்போற்றப்
பரதநடமிடுமொருவன்பொற்பாதமநுதினமும்பணிந்துபோற்றும்
விரதமுறுமாதவர்க்கும்விருந்தொடுவேண்டுவனவெலாம்வியந்தளிக்குஞ்
சரதனுயர்தென்காரைக்குடிராமநாதனருடநயனானோன். (௧)

சளக்கோரப்புலனறுத்துப்பவமறுக்குந்தவநிலையிற்சார்ந்துநாளும்
வளக்கோடுபொடியணியும்வரதருக்குப்புரிபூசைவழங்கிநன்றோ
ருளக்கோயிலுவந்திருக்கமகிழ்ந்தளித்துவணிகர்குலத்தோங்கலும்பர்
விளக்கோதவடியவருண்முதலெடுத்துவியந்துரைக்கும்விமலனானோன். (௨)

காரிரண்டுதரவகுத்தகரதலத்தான்றமிழ்மறைகள்கமழும்வாயான்
வாரிரண்டுமுலைகண்மடவார்மருண்டுமடலெழுதமயக்குஞ்சீர்மாக்
கூரிரண்டுபடப்பொருதகுமரனன்னான்கலைக்கடலின்கூலங்கண்டோ
வீரிரண்டுகவித்துவசிரோமணிசொக்கலிங்கனெனுமியற்பேர்பெற்றோன் (௩)

பவபுரத்தையெரித்தடிமைபூண்டவவென்றிருவர்புகழ்பரமன்மேலாஞ்
சிவபுரத்திலொருபுறத்திலமையமைந்தானநுதினமுஞ்சிந்திப்பார்தந்
தவபுரத்துநீக்கமறநிறைந்தருளுஞ்சுயஞ்சுடராந்தூயோன்மேய
நவபுரத்துப்புராணமதைநவரசமுங்கனிந்தொழுகநவின்றான்மன்னோ. (௪)

திருநெல்வேலி
சேற்றூர்ச் சமஸ்தானவித்துவான்

## ம-ா-ா-ஸ்ரீ அருணாசலக் கவிராயரவர்கள்

இயற்றியது.

---

மதியணிசெஞ்சடைப்பெருமானெமக்கிணைநீயென்றமுனிவரர்கோமா
ன்வாழ், பொதியமலை கைலமலைபோன்மெனநம்போற் புலவர்புகழாநின்ற,
துதியமையும்பாண்டிவளநாட்டிலெந்தையி லிங்கவுருத்துலங்கு மேன்மைப்,
பதியதிகமவற்றுளுயர்பதிபதினான்கவற்றுளொருபதியாதென்னில். (க)

இயம்புமிலக்குமிபுதியநகரெனப்பேர்ப்பொருளவர்க்குமெடுத்துக்காட்டு
நயம்பயிலுந்திருப்புத்தூரதிலருளேதிரண்டெழூந்துநம்மைக்காக்கச்
சுயம்புருவாய்முளைத்தவொருமூர்த்திமுதன்மகிமையெலாந்துலங்கநாளும்
வயம்புகுநல்வடமொழியிற்றேடுபுகண்டெடுத்துள்ளமகிழ்ச்சிகொண்டு. (உ)

பற்பலருமநுபவிக்கத்தென்மொழியிற்புராணமொன்றுபாடித்தந்தான்
சொற்பயில்காரைக்குடிவாழ்வணிகர்குலதிலகமெனத்தோன்றுஞ்செய்ய
கற்பகநேரிராமநாதேந்திரன்றன்மைந்தனெனக்கலையெலாந்தேர்
விற்பனனுஞ்சொக்கலிங்கவள்ளலிவன்பெருமையெம்மால்விளம்பவற்றே.()

---

காரைக்குடியில் வசிக்கின்ற
மழவராயனேந்தல்
சதாவதானம்
ம-ா-ா-ஸ்ரீ

## பாலசுப்பிரமணிய அய்யரவர்கள்

இயற்றியது.

---

பத்தூருநான்கூரும்பாண்டிநன்னாட்டொருமூவர்பாடினரிப்
புத்தூருமொன்றேனுநகரமெலாந்தத்துவம்போற்புடையிற்சூழுஞ்
சித்திதரும்புத்திதருஞ்செல்வமெலாமவணேயாஞ்சிதைவிலாமெய்ப்
பத்திதரும்முத்திதரும்பான்மையினுலுயர்ந்தநிந்தப்பதியாமென்றே. (க)

பின்னுமொருமூவருமாமுதல்வன்கூடற்பெருநகர்வாழ்சொக்கலிங்கப்
பெருமானுண்டு, முன்னுமொருசெட்டியெனப் போந்துஞான முதுமையிற்
கோர்செட்டியையுமுன்னரீன்ற, தன்னிலைமைக்கிசையவொரு செட்டியாகி
த்தன்பெயராற் காரைவந்தித்தலத்தின்மான்மிய, மென்னுமலர்களைக்கவிநா
ராற்றொடுத்தேயினிமைதருமரும்பொருண்மேலிடச்செய்தானே. (உ)

# சிறப்புப்பாயிரங்கள்.

வேம்பத்தூர்ச்

சங்கவித்துவான்களிலொருவரும்,

சிவகெங்கை இராமநாதபுரம் சமஸ்தானவித்துவான்

சிலேடைப்புலியும்,

ஸ்ரீவன்றொண்டவர்கள் மாணாக்கருள்

ஒருவருமாகிய

பிச்சுவய்யரவர்களென்கிற

## முத்துவேங்கடசுப்பய்யரவர்கள்

இயற்றியது.

---

சீர்மேவுகலைமகளுமலைமகளுமெந்நாளுஞ்சிறப்புற்றோங்கு
மேர்மேவுகாரைநகர்வணிகர்குலதிலகனெனவியம்புமன்றற்
றார்மேவுபுயராமநாதகுபேரன்புரிந்ததவத்தாலுற்றோன்
கூர்மேவுநவதளிக்குண்முந்துபிள்ளையார்பட்டிக்கோயில்கொண்டோன். (௧)

பெருந்திருவேட்பூருடையானாறுமுகநாவலநம்பெருமான்றொண்டன்
குருந்தமரத்திருந்தவரைநாயன்மார்பெருமையெலாங்கூறவந்த
வருந்தவரைக்கனவினிலுமறவாவன்றொண்டருக்குமாலவாயிற்
பொருந்துமரன்பணியேசெய்மெய்யப்பசாமிகளாம்புனிதனார்க்கும். (௨)

அன்புறுநாவலர்மருகரானபொன்னம்பலப்பிள்ளையவர்களுக்கும்
பொன்புரையம்பலவாணநாவலவரெனவோதுபுகழாளர்க்கு
மின்புறுநன்மாணாக்கன் மிருகண்டுமைந்தனெனவிலங்குமேலோன்
புன்புலவர்யாவரையும்பெரும்புலவராக்கிவைக்கும்புத்தியுள்ளோன். (௩)

காண்டகையசொக்கலிங்கப்பெயர்புனைந்தோனருட்பாக்கொள்கவின்சீர்
வாய்ந்த, பாண்டிபதினான்கிலுயர் திருப்புத்தூர்மான்மியத்தைப் பகர்கவென்
று, வேண்டியடியவருரைக்க மெய்வீட்டினெறியிதெனவிரும்பியோர்ந்தே,
யீண்டியகங்காநதியின்பெருக்கடக்குஞ்சடையானையிதயத்தெண்ணி. (௪)

அமைத்தபுராணத்தினதுகவிநலனும்பொருணலனுமாகுமேன்மை
தமைத்தனகங்கொண்டியற்சீதளிநாதன்களிதூங்கித்தனையுநல்குங்
கமைத்தகுமிந்நூன்மகிமைகருதனந்தன்மலயமுனிகலைமானென்பார்
சுமைத்தலையன்சங்கடத்தனாவடங்குபேதையெனச்சொலப்பெற்றாரால். (௫)

## ஸ்ரீவன்றொண்டரவர்கள்

மாணாக்கருளொருவராகிய

## ராம. கு. மெ. மெய்யப்பசெட்டியாரவர்கள்

இயற்றியது.

---

பொன்பொலிகொன்றைப்புரிசடாடவியிற்
றன்குறையுரைத்துத்தளர்ந்துநின்றிரக்கும்
வெள்ளைமாமதியையெள்ளுறுசாபப்
பெருவலிநோக்கிக்கருணைமீக்கூர்ந்து
வெருவலைநீயெனச்சிறுவிதிமுனிவொடு
மோருடற்குறைப்பணிக்குட்கலுமொரீஇக்
கூருடற்பலபணிக்குழூவுள்வீற்றிருப்பான்
கண்ணருள்புரிந்தபுண்ணியமூர்த்தி
முத்தொழிலியற்றுமூவரிலிருவர்
பித்தரின்மான்றுபிரமம்யாமெனத்
தத்தமிற்பொருதுதராதலநடுங்க
முனிந்துசெருக்குழிநனந்தலைத்தோன்றி
யன்னாரஞ்சியகந்தெளிந்தடிமுடி
யிந்நாட்கண்டனரிறைவராமெனத்
தோலடிப்பொற்சிறைவாலியவன்னமு
நீலமலைநிகர்கோலத்துருவமுங்
கூடினர்பன்னாடேடியுமறியாச்
சோதியாய்நின்றவாதிநாயக
னகிலசராசரமனைத்துமீன்றளித்த
முகிலுறழ்கதுப்பின்முற்றாவெம்முலைத்
தெய்வக்கற்பிற்பெய்வளைமுன்கைச்
செவ்வாய்வெண்ணகைக்கரியகட்பசுந்தோட்
டுவரிதழ்மலர்த்தாட்கௌரிநாயகிக்கும்
பூத்தலையாயிரம்பொற்றலைசுமப்ப
நாத்தலைமையிற்பொலிநாகபூபதிக்கு
மன்னவற்கிளையபன்னகர்பலர்க்குங்
காமருசுரும்பிமிர்தாமரைப்பொகுட்டினு
நேமியந்தடக்கைமாமுகினிறத்தினு
மரசுவீற்றிருக்குந்திருமகளார்க்கு
மீட்டுமைந்தொழினடங்காட்டியபெருமா
னொருத்தலுரித்ததிருத்தலநாதன்
றன்றிருப்புத்தூர்மன்றன்மான்மியமாம்

வடமொழிதென்மொழிநடையுறவனையநூற்
கடலின்வாலறிவாந்தடமலைநிறீஇ
மாணுறுமன்பாநாணிடையாத்துத்
தெள்ளியமனத்தானுள்ளுறமதித்துச்
சொற்சுவைகெழுமிநற்பொருண்மணந்து
கற்பனையுறுதமிழ்க்கவியெனுமமுத
மலையுமலவனுங்கொலைசெறிபாந்தளு
மீர்ப்பவர்பலருங்கார்ப்புயறுணையுந்
தோலாமுயற்சியாலினிதடைந்து
மாலம்வந்தடர்ப்பவாவிக்கயிர்த்து
மேனூழ்வலத்தின்மெய்க்கலத்துறுதி
பயவாவமிர்தம்பண்டையிற்பெற்ற
மருவுவிட்புலவர்பெரிதுநாணெய்த
விரவுமட்புலவர்பரவியவுயிர்க்கு
மெய்ந்நலன்பயப்பவிழைவினருந்தி
யாராவின்பமடையவளித்தனன்
றூரார்பல்பொறிததைமணிச்சிகரி
நிறுவியகொடிவான்குறுகுபுமகவான்
றமனியநகரினமையணிநோக்கி
நனியருவருத்துநற்றலைநடுங்கும்
பேரழகமைந்தகாரைமாநகரான்
நாற்பாற்குலத்தினலஞ்செறிவணிகர்
சீர்க்குலம்புரிந்தசெய்தவமனையா
னராமனுதரசத்தியக்கஞ்சு
மிராமநாதனிதம்பெறுகுமர
னென்பானென்றபொன்பொலிகோட்டத்
துள்ளுசீர்க்கற்பகப்பிள்ளைகோட்டத்த
னீன்றபொழுதினுமின்புறுந்தன்மகற்
சான்றோனெனக்கேட்டதாயென
வருபொதுவிதியைவயங்குதன்னளவின்
விரவியசிறப்புவிதியெனக்கொண்டோ
னொழுக்கம்விழுப்பந்தரலினென்றோதும்
வழுக்கறுதிருக்குறண்மாண்பொருளானோன்
காழியர்முதலாம்வாழியவீரிரு
சமயகுரவருமமையவோருருக்
கொண்டனராமெனவொண்டவர்வழுத்தப்
பல்வளம்பழுக்குஞ்செல்வநல்லீழத்
தெல்லையில்புகழ்சேர்நல்லைவந்தித்து
வெய்யபுன்மதக்களைவேரறக்களைந்து

சைவமென்னுந்தனிப்பயிர்வளர்த்த
தகைசெறியாறுமுகநாவலர்கோன்
மேலருள்செறிகருகூலமேயணையான்
பன்மலரிடத்தும்பரிவொடும்போய்ப்போய்
நன்மதுநுகருநாகிளஞ்சுரும்பி
னின்றொண்டறியாவிழுதையேனையுந்
தன்றொண்டியற்றுநர்சங்கத்தொழச்செய்
பொன்றொண்டியனவபுரியார்க்கினிய
வன்றொண்டப்பெயர்மாதவனிடத்துஞ்
சதுரர்சங்கத்தமதுரைமாநகரி
னெல்லைநீங்காநல்விரதத்தொடு
மட்டவிழ்ந்தொழுகமலர்ந்தநாற்போதுங்
கட்டுபுசாத்திக்கனிந்துமுப்போது
மாதியாய்நடுவொயந்தமாயகண்ட
சோதியாய்நிறைந்தசோமசுந்தரனை
வந்தனைபுரியுமெந்தைமெய்யப்ப
தேசிகனிடத்துமாசறுசிறப்பி
னிலக்கணமலையத்தலைத்தலையிவர்ந்தாங்
கிலக்கியக்கடலைவலத்தொடுமாந்தித்
தன்னுழையடைந்தநன்னர்மாணுக்கர்க்
கையமுற்குறும்புகையறத்தடிந்து
செந்தமிழமிழ்தந்தேக்குறவூட்டு
மூலப்பில்சேர்ப்பொன்னம்பலப்பெயர்புனைந்த
வித்தகனிடத்துஞ்சுத்தாத்துவித
சித்தாந்தத்தினுற்றிடுமரிய
வுண்மைவிரிக்கும்வண்மைநூல்பலவு
மேசறத்தெளிந்தகாசறுசிறப்பிற்
பம்பியசீர்த்தியம்பலவாண
நாவலரிடத்துமேவியாண்டாண்டு
சொன்னிலைமுறைமையிற்பன்னூலுணர்ந்தோன்
றன்னையாதரித்தபன்மைமாணுக்கர்
சிந்தையின்வயன்மதகுந்துதண்புனலென
விற்பனமேறச்சொற்பொருள்விரிப்போன்
பொய்ம்மதத்தொழுகும்பூரியர்க்கசனி
மெய்ம்மதத்தொழுகும்விரதியர்க்காவி
தெய்வதம்பழுத்தசைவசித்தாந்தி
செங்கதிர்மதியஞ்சென்னெறிபிழைப்பினுஞ்
சங்கரனடியார்தம்மைமறப்பினும்
பைங்கடலிகந்துபடுகரைகடப்பினும்

தவாப்புரிவொடுசெய்சிவார்ச்சனை மறவா
னென்னினுமெனக்குயிர்தன்னினுமினியான்
மெய்க்கலிங்கத்தின்வேறுகண்டமருஞ்
சொக்கலிங்கப்பெயர்ச்சுகுணவேண்மன்றே
யெழுதாமறைபுகன்றிரும்பொருள்விளக்கும்
பழுதில்சீர்த்திப்பரமன்மான்மியமிஃ
தெழுதுமெழுத்தினிசைத்தலினுமெளி
தெழுதாவெழுத்தேயெவர்க்கும்பயத்தறெதன்
றழகுறக்கருதியச்சிடுவித்தனன்
வழுவறுசிறப்பின்வணிகர்சிந்தாமணி
நம்பொருளின்பநாடுவதன்றிப்
பம்பும்வீடதுபோற்பயவாதென்றே
யிருநிதிபடைத்தவடதிசைக்கதிபனுந்
தருமணியானுடைச்சுரகுலாதிபனு
மொருங்கழுக்கறுக்குமரும்பெறற்செல்வன்
சிவனடியலதுசிந்தையினினையா
னவனடியவரையவனெனக்கண்டோன்
றவநெறியல்லாச்சார்புவேறில்லான்
பவநெறியொழுக்கர்பற்றுப்பற்று
நவபுரிநாதனற்சினகரத்தைச்
சிவபுரியெனவேசின்மயனுவப்ப
வெண்ணரும்பணிகளியற்றுபுமேலு
மார்த்தியேதிரண்டமூர்த்தியன்வாய்மைத்
திராவிடவேதசிரவணமேயிப்
பராவுடலெடுத்தபயனெனத்தேர்ந்தோன்
கழனியப்பன்னங்கவின்றபள்ளத்தூர்ப்
பழனியப்பன்முன்பயிறவத்தோன்ற
லமரப்பன்னூலாய்ந்த
குமரப்பப்பெயர்க்குரிசின்மாதோ.

---

ஸ்ரீவன்றொண்டரவர்கள்
மாணாக்கருளொருவராகிய

## ராம. வெ. இராமநாதச்செட்டியாரவர்கள்

இயற்றியது.

---

திகழ்தேவைமாநகர்சிறக்கவருவன்றொண்ட
தேசிகச்சலதிபுக்குச்
செய்யநன்னூலிலக்கணவிலக்கியமெனுந்
தெண்ணீர்தெவிட்டவுண்டு

செப்பரியகற்பனைச்சூற்கொண்டுபேரறிஞர்
சேரவைச்சேண்படர்ந்து
சீருற்றபிரசங்கவிடியொலிபுலறிவினர்
திடுக்கிடும்படிமுழக்கி
யிகழ்வினற்பொருண்மின்னல்காட்டிநிறைகவிமாரி
யென்ஞான்றுமெங்கும்வருடித்
தெழுகாளமேகமியலிசைநாடகத்தமி
ழியம்பும்ப்ரசண்டவாக்கி
யேகபாதந்திரிபுவண்ணங்கலித்துறை
யிசைப்பனுவல்கோவைபரணி
யெனவுரைபல்கவிகளாற்பரசிவனுயிர்க்கருளு
மியல்பனைத்துங்குறித்து
நிகழுமெய்க்குருலிங்கசங்கமத்தைத்துதிசெய்
நெறிவழாதொழுகுமன்ப
னிதிபெருகுகாரையம்பதிசெய்நல்வினைப்பய
னிரம்பச்செனித்தநிபுண
னிலமீதுதனவணிகர்மரபுமிகவுயரவரு
நேசவிசுவாசபோச
னியதிமுறைதவருதசொக்கலிங்கக்கவிஞ
னெற்கள்கழுகொத்துநிலவும்
புகழ்வளம்பெறுதிருப்புத்தூரின்முக்கட்
புராதனற்போற்றிநெடுமால்
பொன்புவனிமுற்பலோரருள்பெற்றமான்மியம்
புண்ணியர்செவிக்கினிக்கப்
புனிதமுறுசெந்தமிழ்விருத்தயாப்பாகவிப்
புவிமிசைவிளக்கிவைத்தான்
புலவரிஃதாரியக்கடன்மதித்திடவந்த
புத்தமுதமென்றுகொளவே.

---

தேவிகோட்டைச்

சைவப்பிரகாசவித்தியாசாலைத்தலைமை

யுபாத்தியாயர்

## குரு. சுப்பிரமணிய அய்யாரவர்கள்

இயற்றியது.

---

தன்மாமியருச்சித்ததலப்பெருமைசொலுமாற்றறனக்கேயல்லாற்
புன்மானுயருக்கில்லையென்றதனைக்கலைமாதுபுகன்றாளென்னப்
பொன்மானன்றரற்போற்றுதிருப்புத்தூர்ப்புராணத்தைப்புனைந்தானந்தச்
சொன்மானுந்தனக்கொவ்வாச்சொக்கலிங்கவணிகனெனுந்தோன்றலுனே.

---

வேம்பத்தூர்
சங்கவித்துவான்களிலொருவரும்
சாமாவய்யரென்கிற
ஆண்டியய்யரவர்கள் குமாரருமாகிய
## ஸௌந்தரமய்யரவர்கள்
இயற்றியது.

---

மாமேவுமதிமேவுமலர்மேவுமணமேவுவளங்கண்மேவுங்
காமேவுமளகையதிபதிவிழையுங்காரைதனிற்கலந்துவாழ்வோன்
பாமேவுவணிககுலராமனுதன்செய்தவப்பயனேயென்ன
நாமேவுமிருகண்டுதனயனிகர்சொக்கலிங்கநாவலோனே. (௧)

அருமறைகண்மொழிபல்கலையாகமபுராணமுதலாய்ந்துநாளு
மருவும்வினைப்பயனையனுபவிக்கவருமுடலழிந்துமாயாவண்ணம்
பெருமையுளமதுரமிகுஞ்சொற்சுவையும்பொருட்சுவையும்பேணியோங்கத்
திருமருவுநவபுரத்தின்மான்மியத்தைச்செந்தமிழாற்செய்தான்மன்றோ. (௨)

---

ஷை யூர்
சங்கவித்துவான்களில் ஒருவரும்,
சிலேடைப்புலி-பிச்சுவையரவர்கள் கனிஷ்டரும்
ஆகிய
## சுப்பய்யரவர்கள்
இயற்றியது.

---

கருப்புத்தூரவிர்காரைச்சொக்கலிங்கவணிகனுயர்கல்விமாணூர்
மருப்புத்தூர்வையணியரன்பதமலர்ச்சபரியைபுரிமார்க்கண்டன்காக்
சுருப்புத்தூரவிருந்துங்கஞ்சமலர்த்தேனையுணுஞ்சுகுணம்போலத்
திருப்புத்தூர்த்தலபுராணத்தையம்புலவர்மகிழச்செப்பினானே.

திருமெய்யம்

வைக்கீல்

## வைத்தியநாதய்யரவர்கள்

இயற்றியது.

---

திருப்புத்தூர்வீற்றிருக்குஞ்சிவபெருமான்கீர்த்திதனைத்தெளிந்தாராய்ந்தே
கருப்புத்தூர்வாராமற்சிவபுரமேதன்னிடமாக்களித்துவாழ
விருப்புற்றூர்கவிமலராற்றமிழ்மொழியின்சுவைபெருகவிளம்பினானற்
றிருப்புத்தூர்க்காரையுறுவணிகர்மணிசொக்கலிங்கதீரன்றானே.

---

மயூரகிரிவாசியாகிய

திருவண்ணாமலையாதீனம் தர்மகர்த்திருத்துவத்தைச்சார்ந்த

தேவஸ்தானங்களின் ஆபீஸ்

கியாஷ்கீபர்

அப்பாவுபிள்ளையென்றுவழங்கும்

## சாமிநாதபிள்ளையவர்கள்

இயற்றியது.

---

தென்வடசொன்மாதவருஞ்செஞ்சுருதிமாமுனியும்
பன்னுபுராணாதிபகர்முனியு—முன்னும்
புலவருமேமேனோர்பலரும்போற்றுபொருளெல்லா
மிலகுகவிதோறுமிசைத்தே. (க)

பதிபசுபாசத்தினுண்மைப்பக்குவர்கண்மெச்ச
நிதிசிவமேயென்றெண்ணுநேயர்—துதிபுகலச்
சிதளிப்புத்தூர்ச்சரிதஞ்செப்பினான்சொக்கலிங்க
மாதனதனேர்வணிகமால். (உ)

---

ஸ்ரீவிஞ்ஞாநபுரஸ்தநல்லூராக்கியநகரநிவாச
திராவிடபாஷாதுரீண
சுத்தாத்துவிதசித்தாந்தசைவவியவஸ்தாபக
ஸ்ரீமந்நாவலர்பெருமான் பாததூளி
சிரமேற்கொண்ட
யாழ்ப்பாணத்து
வட்டுக்கோட்டை

## ஆ. அம்பலவாண நாவலரவர்கள்

இயற்றியது.

---

திருவளருமலர்ச்சும்மைச்செழும்பொழில்கள்சூழ்ந்திலங்கு
மருவளர்செந்தமிழ்ப்பாண்டிமண்டலத்துப்பன்னுங்கா
முருவளர்வான்மதிச்சடையார்க்குகந்ததலமவற்றொன்று
புருவளர்விற்றிருவளர்மாபுரிதிருப்புத்தூராமல். (க)

அன்னதலமதுகௌரியரியலர்மின்காரிசுரர்
மன்னவன்சேயிவர்முதலோர்தொழுதுவரம்வாய்ந்ததெனி
லின்னதெனவிதன்பெருமையியம்புநர்யாரிவ்வுலகின்
முன்னுபலமொழியுள்ளுமுதன்மொழியாம்வடமொழியில் (உ)

சூதமுனியொருவாறுசொற்றதனைத்தூய்மைமிகு
மாதவத்தோர்வழுத்துமருள்வளஞ்சால்செந்தமிழ்மொழியி
லோதுகெனவரனன்பர்பலர்வேண்டவுவந்துரைத்தான்
போதமலிநூல்கள்பலபுரைதபக்கற்றுணர்புனிதன். (ங)

அருளடக்கம்பொறைவாய்மையன்புநடுநிலையின்சொற்
பொருண்மிகுமெய்க்கொடையாதிபொருந்துகுணக்குன்றனையான்
றிருவருளேயுருக்கொளுநஞ்சீமானுவலர்பெருமான்
குருபதத்தன்பாலுரிமையெனக்கியைந்தகொள்கையினன். (ச)

சைவசிகாமணியெங்கள்சாதுசிகாமணிபாசத்
தெவ்வைமுனிந்திடுதீரசிகாமணிநாவலர்செம்மல்
செவ்விதருட்டொடர்பதனுற்சிறப்புப்பாசுரமற்றோர்க்
கெவ்வழியுமீயாதேதன்றனக்கீயுமியல்வாய்ந்தோன். (ரு)

வேதவாகமங்களெலாம்விளம்புபொருள்சிவமென்றே
போதமலிதாவரசங்கமமிவற்றிற்பொருந்துநெறி
யாதரவின்வழிபடுவோனக்கமணிவெண்ணீறு
மோதுதிருவெழுத்தைந்துமுறுதனமாக்கொண்டுயர்ந்தோன். (சா)

பாடுபுகழ்நால்வருரைமுதன்முறைகள்பன்னிரண்டுந்
தேடுமியன்மெய்கண்டசித்தாந்தம்பதினான்கும்
வீடுறுமெய்ச்சிவாநுபவம்விளைநிலமாவதுவேட்டு
நாடுமருட்டாளாண்மைவழுவாதநான்மையினன். (எ)

அரியயற்குமரிதாயவசிதாராவிரதமென்ப
பரம்மனையநயவாமையங்கதையிப்பார்மீதே
திரமுறுதன்செயலதனாற்றெருட்டுமுயர்சிலனெனத்
தரியலரும்வியந்துரைக்கத்தகுநிதரிசனமானோன் (அ)

என்போல்வார்க்குற்றதுணையியல்காரைக்குடியதனி
லின்பால்செய்வணிகர்குலத்திராமநாதக்குரிசி
றன்பான்மெய்த்தவத்துதித்தோன்சைவநெறிதகைவார்க்கு
மன்பானன்னெறிநின்றசொக்கலிங்கமாமிடியே. (கூ)

---

# சூசிபத்திரம்.



ஆ-பாடற்றொகை - கஙஙசா.

---


திருப்புத்தூர்ப்புராணம்

தேவகோட்டை:

திருநாவுக்கரசுநாயனார் அச்சியந்திர சாலையிலும்,

அதன் டைடில்பேசும், சிறப்புப்பாயிரங்களும்

சென்னை:

மதராசுரிப்பன் அச்சியந்திர சாலையிலும்

பதிப்பிக்கப்பட்டன.

# பிழைதிருத்தம்.



| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௨ | ௬ | ௩ | குறிசின் | குறிச்சின் |
| ௨௧ | ௯௧ | ௪ | வீண்டிலை | வீண்டிலை |
| ௨௨ | ௧௦௧ | ௧ | தென்றோ | தொன்றோ |
| ,, | ௧௦௫ | ௩ | யுணர்த்தி | யுணர்ந்தி |
| ,, | ,, | ௪ | ஞசென்ற | ஞச்சென்ற |
| ௨௪ | ௧ | ௨ | னுர்ய | னுயர் |
| ௨௮ | ௩௫ | ௪ | காதிகு | காதிக்கு |
| ௩௫ | ௯௧ | ௨ | வழியான் | வழியாகன் |
| ௫௦ | ௮ | ௨ | நேயமா | னேயமா |
| ௫௧ | ௨ | ௧ | அகண்டைக | அகண்டைடுக |
| ௬௪ | ௭௮ | ௧ | லாத | லாகாத |
| ,, | ௮௦ | ௧ | டொன்றாவ் | டொன்றொவ் |
| ௬௬ | ௧௪ | ௨ | பலத்தி | பலதலத்தி |
| ௬௭ | ௧௫ | ௪ | வென்றான் | வென்றான் |
| ,, | ௧௮ | ௩ | நின்றொளிர் | ணின்றொளிர் |
| ,, | ௨௦ | ௪ | பயினிடங் | பயினடங் |
| ௭௨ | ௬௪ | ௧ | பொருள் | பொழில் |
| ௭௯ | ௧௨௦ | ௧ | யீண்டு | ஈண்டு |
| ௮௦ | ௧௨௩ | ௪ | தரும்பண | தருப்பணா |
| ,, | ௧௨௫ | ௨ | தைத்தல | கைத்தல |
| ௯௭ | ௩௩ | ௨ | ஞொடித்த | நொடித்த |
| ௯௯ | ௫௨ | ௩ | நிறையா | நிறையவா |
| ௧௧௯ | ௬௮ | ௧ | மநியமா | நியமமா |
| ௧௨௦ | ௭௬ | ௩ | யீட்டைட | யீட்டிட |
| ௧௨௩ | ௧௦௧ | ௨ | துபுத்தி | தபுத்தி |
| ,, | ௧௦௫ | ௪ | விடுகேச | வடுகேச |
| ௧௨௪ | ௧௧௦ | ௧ | வின்டனி | விண்டனி |
| ௧௨௯ | ௧௪௮ | ௩ | விரிதந்த | விரித்த |
| ௧௩௫ | ௩௮ | ௨ | மொளிந்தி | மொழிந்தி |
| ௧௪௦ | ௮௦ | ௪ | வன்றி | வொன்றி |
| ௧௪௪ | ௨௦ | ௨ | டிரதை | டிரத்தை |
| ௧௪௬ | ௩௬ | ௩ | புகந்தா | புகுந்தா |
| ௧௫௯ | ௧௪௩ | ௨ | மதிப்புரீத | மதிப்புரீஇத் |

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# திருப்புத்தூர்ப்புராணம்.

## விநாயகர்

காப்பு.

திருத்தலம்புகழாரியந்தென் மொழிப்
பொருத்தலம்புனைசொற்பொருள் பொற்புறக்
கருத்தலம்புணர்காட்சியர்காமுறு
மொருத்தலம்புயச்சேவடியுன்னுவாம். (க)

வேறு.

திருவாக்குக்கிறைவனெனுந்தேவகுருமுதலெவருஞ்செயலாரம்பத்
தொருவாக்கும்பிடுதலைவப்பொருட்டியற்றிக்கருமசித்தியுறுகின்றாரப்
பொருவாக்குன்றலிற்பொருளாங்கைவலியபத*நிபனைப்புணையிருணத்
துருவாக்குங்கருணைமழையும்பன்முகநம்பனையெம்முளத்திற்சேர்ப்பாம்

## நூற்பயன்.

திருவாழுந்திருப்புத்தூர்ச்சிவசரிதம்படனவிதிசிறப்பச்செய்து [போகங்
ளுருகார்வத்துடன்கேட்போருரைப்போர்நன்மகவுபொருளுலப்பில்
தருவாழ்வுபெற்றுநெடுநாளமர்ந்துகோரங்கிரராய்த்தருபொன்னாட்டின்
மருவாகின்றின்பமுறீஇமறைமுதல்வனறைகழற்கீழ்மன்னிவாழ்வார். ()

## வாழ்த்து.

வேதநெறிமகம்வளர்கவிண்மாரிமுறைபொழிகவிரிநீர்வையத்
தோதுவளமறம்பொருளின்போங்குகவைதிகசைவமுயர்கவென்று
மீதுறுககண்மணியும்வெண்ணீறுமைந்தெழுத்தும்விமலஞான
பூதபரம்பரைபொலிகபுரவலன்செங்கோல்வாழ்கபுவனமெல்லாம். (உ)

---

* நிபம் - காரணம்.

## கடவுள்வாழ்த்து.

### சீதளிநாதர்

திருமாதவன்புவனிபெருகுதவப்பிருகுதனையிருந்தாள்சென்றே
திருமாதவன்புவளர்சிந்தையராய்த்தினம்போற்றுஞ்சீதளீசன்
றிருமாதவன்புவனமதியிதழிபொதிவேணிச்செம்மல்யாற்க
திருமாதவன்புவனந்தருபரமன்றிருவடிகள்சென்னிசேர்ப்பாம். (க)

பிறங்கைதபலபுக்கொழிந்தும்பிரமமெனத்தமைமான்றபிரமன்மாற்குச்
சிறந்தவயன்சுதனுந்திருப்பெயரீந்தவர்க்குயர்வுதிகழுவேதந் [ல்வத்
தறைந்தருளுநிறைந்ததனியருட்கடல்பொற்றிருத்தலத்தினைளவாய்ச்செ
இறந்தழையுஞ்சீதளியிற்சீதளிநாயகன்மலர்த்தாள்சிந்தைசேர்ப்பாம். ( )

### சிவகாமியம்மை.

கரத்தானைத்தோட்டெழின்மகரத்தானையறம்வளர்த்தகமலநாளஞ்செய்
கரத்தானையருணிறைசாகரத்தானைத்திருத்தலமென்கலிஞர்மாங
கரத்தானைஞானபஞ்சாக்கரத்தானையிலங்குசிவகாமியைச்சே
கரத்தானைமதிமறைச்சிகரத்தானைமலர்த்தானைக்கருதிவாழ்வாம். (௩)

### நடேசர்.

பைதூக்கிவருமரவப்பணிதூக்கிச்சடையின்மிசைப்பயங்கொளுறு
மைதூக்கிக்கரத்திளமான்மறிதூக்கிமதிதூக்கிமயிர்தூக்கிப் [க்
பொய்தூக்கித்தளருமிடைச்சிவகாமிகாணவெமைப்போல்வார்தம்மை
கைதூக்கியாளுகைக்கோர்காறூக்கிநடித்தவனைக்கருத்துள்வைப்பாம்.

### சிவகாமியம்மை.

வேறு.

தத்துவநேர்கண்டுசுத்திகண்டுதன்னைத்தான்கண்டுதற்சுத்திதனையுங்க
ண்டாங், கொத்தசிவங்கண்டுகலந்துரியபோகத்துற்றிடுவேரின்பதனையு
ணர்விலேழுங், கைத்தலநெல்லியிற்கண்டுகலப்பவெம்மான்கௌரிடங்
கண்டுமனங்களிப்பாளாகிச், சித்தமகிழ்ந்தெமையளிக்குமன்னையெங்க
ள்சிவகாமசுந்தரிதாள்சென்னிசேர்ப்பாம். (௫)

### தட்சிணாமூர்த்தி.

வேறு.

தடவிருக்கம்மறைமுடிவுதாமுழுதுங்கேட்டுணர்ந்துந்தம்முனையப்
படவிருக்கநால்வருக்குஞ்சித்தாந்தத்தனிப்பொருளைப்பகர்ந்துதேறக்
கடவிருக்கவின்பொருளென்றருட்குறிசின்முத்திரைக்கைகாட்டிஞா
வடவிருக்கத்தமர்ந்தருளுமறைப்பொருளினைப்பதுமமலர்த்தாள் [ன
[போற்றி.

## வன்னியடிவிநாயகர்.

எவமொனினுநினைப்பவர்விக்கினந்தீர்த்தல்லார்க்கதனையியற்றும்வாய்மை
இவன்பெயர்தன்றனக்கேயாய்ச்சிறப்பவொளிர்மறைப்பொருளைத்தெய்
வவானனம், புலிதொழுமன்னவபுரியிற்புண்ணியனைவன்னியடிப்புனிதவாழ்
வைக், கவளமதுகளிற்றினையெங்கற்பகத்தையற்பகத்திற்கண்டுவாழ்வா
[ம்.

## சுப்பிரமணியர்.

அருகுமரற்றெறுகனற்கணவதரித்தெம்பவமிரித்தற்கனுதிதொட்டே [ங்
திருகுமரந்தையையகற்றிச்சிவந்தழைப்பவுவந்தருளுஞ்சேய்தன்கண்ட
கருகுமரன்குமரனெனனிருபயதமாத்திரத்திற்காணமேவு
மொருகுமரனிருசரணமுளத்திலுநஞ்சிரத்திலும்வைத்துவந்துவாழ்வாம்

## வீரபத்திரர்.

அருமறைமுற்றுணர்ந்தாலுமருளினடங்கார்கெடுவரதுமெய்யென்ற
றெருளமுற்றுங்கோரமதேதிருவுருவாப்போந்துமகந்தெறன்மேற்கொ
ண்டும், வருமுறைமற்றடங்கினர்க்காங்கருளறெளிவுறவயற்குவலவனு
ருந், திருவளித்தமறக்கருணையறக்கருணைப்பெருங்கடலுள்சென்னிசே
ர்ப்பாம். (௯)

## வைரவர்.

வேறு.

துயரவந்தனையருள்கெனத்துதித்தவர்சுகுமார்ந்
துயரவந்தனைவகற்றியவ்வூறுசெய்தவர்பாற்
பயரவந்தனைப்புரிந்தவன்சயந்தனைப்படரு
மயரவந்தனைக்காண்டலுமாற்றினேற்பணிவாம். (௰)

## திருநந்திதேவர்.

வேறு.

ஆயுமரன்கயிலைமுதல்வாயிலமர்ந்தகம்புறமுமவனேதானே, யாயுமடை
வார்தமைத்தன்னடியுறவைத்துட்புகுத்துமரியகாவற், றூயபணிதலைக்
கொண்டோன்மெய்ப்போதமுணர்த்துகுருத்துவமுங்கொண்டு, சேய
னாயுமண்ணியராச்சேர்த்தருளுநந்தீசன்றிருத்தாள்போற்றி. (௧௧)

## விட்டுணு.

பாயும்விடையாயொருபாற்பைங்கொடியாய்ப்பாணமாய்ப்பரன்மேற்
கொள்ளுந், தூயவரம்பெற்றுனைத் துலங்குமவன்றிருநடமேதொழுமுன்

ஞானை, மாயவனைமாயவனைமாயவனையானென்றுளையுண்மாசன்றிருஞானை,
யாயவரன்சீதளியினமர்ந்தருளெம்பெருமானையடியிற்றொழுவாம். (௧௦)

## இலக்குமி.

வேறு.

வேரிசத்தினருளின்வரிபுண்டுசெங்
வாரிசத்தின்மருவுமாடக்கைதழு
ராரிசத்திதனைல்லருமேறுக்கங்
பாரிசத்தின்வனராப்பரசுவாம். (௧௧)

## சரசுவதி.

வேறு.

ஆலியகமண்டலத்தோன்றுறுவினையர்க்கிட்டன்பர்
சாலியகமலவேணித்தற்பரனருள்பெற்றுய்வான்
கோலியகமமெய்ந்நூல்கள்குறித்துணரறிவுகூட்டுங்
வாலியகமலத்தன்னைமலரடிமனத்துள்வைப்பாம். (௧௨)

## தமிழாசிரியர்.

வேறு.

அகத்தியலவருந்தமிழ்மாமறைமுதனூலாய்த்துதமிழ்வளிமாக்க [ற்பி
ளகத்தியங்குபிறப்பொழிந்தின்படைவுறச்செய்திளங்கெதன்றலளாவுஞ்செ
ணகத்தியனூலகத்தியந்தமர்ந்தருளுந்தமிழ்க்குரவனைவலம்போற்று
மகத்தியனையகத்தியனைவகலவறிவகலினைத்தடியிற்றொழுவாம். (௧௩)

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

நாதனுமைநாப்பணின்றுநாருருவிற்காழிவந்துநயந்தருதான்று [பச்
மாதியவன்பொருள்பிதுரார்ச்சிதந்தனக்காதலையுவைத்துமைமையிவாய்ப்
சீதரனுக்கரனுருவசித்திதந்தபுத்தமுறைக்கொடியேயனுள்ள
மீதுமொளிர்மணிவிளக்கைவித்தகனைநித்தலுமுள்விரும்பிவாழ்வாம். ()

## திருநாவுக்கரசுநாயனார்.

பார்த்தனவேமனஞ்சோர்ந்துபதைத்துகனன்வருணன்முதற்பற்பலோ
ரைக், கூர்த்ததுணைகொடுகுரம்புகுயிற்றியலேகடந்திடுமெக்குரிசிறைனை,
வார்த்தெறிநீரமிழ்த்திலைதன்னருள்வாக்கிறைனையிறைவம்பியாக, நீத்தமுந்
நீர்நீத்தெமையும்பவக்கடனீத்திட்டவர்தாணிணைத்துவாழ்வாம். (௧௫)

சிவமயம்.

# திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

அருளிச்செய்த

# தேவாரத்திருப்பதிகம்.

---

பண் - தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

வெங்கள்விம்முவெறியார்பொழிற்சோலை
திங்களோடுதிளைக்குந்திருப்புத்தூர்க்
கங்கைதங்குமுடியாரவர்போலு
மெங்களுச்சியுறையுமிறையாரே. (௧)

வேனல்விம்முவெறியார்பொழிற்சோலைத்
தேனும்வண்டுந்திளைக்குந்திருப்புத்தூ
ரூனமின்றியுறைவாரவர்போலு
மேனமுள்ளுமெயிறும்புனைவாரே. (௨)

பாங்குநல்லவரிவண்டிசைபாடத்
தேங்கொள்கொன்றைதிளைக்குந்திருப்புத்தூ
ரோங்குகோயிலுறைவாரவர்போலுந்
தாங்குதிங்கடவழ்புன்சடையாரே. (௩)

நாறவிண்டநறுமாமலர்கவ்வித்
தேறல்வண்டுதிளைக்குந்திருப்புத்தூ
ரூறல்வாழ்க்கையுடையாரவர்போலு
மேறுகொண்டகொடியெம்மிறையாரே. (௪)

இசைவிளங்குமெழில்சூழ்ந்தியல்பாகத்
திசைவிளங்குபொழில்சூழ்திருப்புத்தூர்ப்
பசைவிளங்கப்படித்தாரவர்போலும்
வசைவிளங்கும்வடிசேர்நுதலாரே. (௫)

வெண்ணிறத்தவிளாயோடலருந்தித்
தெண்ணிறத்தபுனல்பாய்திருப்புத்தூ
ரொண்ணிறத்தவொளியாரவர்போலும்
வெண்ணிறத்தவிடைசேர்கொடியாரே. (௬)

நெய்தலாம்பல்கெழுநீர்மலர்ந்தெங்குஞ்
செய்கண்மல்குசிவனூர்திருப்புத்தூர்த்
தையல்பாகமகிழ்ந்தாரவர்போலு
மையுணஞ்சமருவுமிடற்றாரே. (௭)

கருக்கமெல்லாங்கமழும்பொழிற்சோலைத்
திருக்கொள்செம்மைவிழவார்திருப்புத்தூ
ரிருக்கவல்லவிறைவரவர்போலு
மரக்கனொல்கவிரலாலடர்த்தாரே. (௮)

மருவியெங்குங்வளருமடமஞ்ஞைஞ்
தெருவுதோறுந்திளைக்குந்திருப்புத்தூர்ப்
பெருகிவாழும்பெருமானவன்போலும்
பிரமன்மாலுமறியாப்பெரியோனே. (௯)

கூறைபோர்க்குந்தொழிலாரமண்கூற
றேறல்வேண்டாதெளிமின்றிருப்புத்தூ
ராறுநான்குமமர்ந்தாரவர்போலு
மேறுகொண்டகொடியெம்மிறையாரே. (௧௦)

நல்லகேள்விஞானசம்பந்தன்
செல்வர்சேடருறையுந்திருப்புத்தூர்ச்
சொல்லல்பாடல்வல்லார்தமக்கென்று
மல்லறீருமவலமடையாவே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்.

திருநாவுக்கரசுநாயனார்

அருளிச்செய்த

# தேவாரத்திருப்பதிகம்.

---

## திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

புரிந்தமரர்தொழுதேத்தும்புகழ்தக்கான்காண்போர்விடையின்பாகன்காண்புவனமேழும், விரிந்துபலவுயிராகிவிளங்கினான்காண்விரைக்கொன்றைக்கண்ணியன்காண்வேதநான்குந், தெரிந்துமுதல்படைத்தோனைச்சிரங்கொண்டோன்காண்டீர்த்தன்காண்டிருமாலோர்பங்கத்தான்காண், டிருந்துவயல்புடைதழுவுதிருப்புத்தூரிற்றிருத்தளியான்காணவனென்சிந்தையானே. (௧)

வாராருமுலைமங்கைபங்கத்தான்காண்மாமறைகளாயவன்காண்மண்ணும்விண்ணுங், கூரார்வெந்தழலவனுங்காற்றுநீருங்குலவரையுமாயவன்காண்கொடுநஞ்சுண்ட, காராருங்கண்டன்காணெண்டோளன்காண்கயிலைமலைப்பொருப்பன்காண்விருப்போடென்றுந், தேராருநெடுவீதித்திருப்புத்தூரிற்றிருத்தளியான்காணவனென்சிந்தையானே. (௨)

மின்காட்டுங்கொடிமருங்குலுமையாட்கென்றும்விருப்பவன்காண்பொருப்புவலிச்சிலைக்கையோன்கா, ணன்பாட்டுப்புலவனாய்ச்சங்கமேறிநற்கனகக்கிழிதருமிக்கருளினோன்காண், பொன்காட்டக்கடிக்கொன்றைமருங்கேநின்றபுனக்காந்தள்கைகாட்டக்கண்டுவண்டே, தென்காட்டுஞ்செழும்புறவிற்றிருப்புத்தூரிற்றிருத்தளியான்காணவனென்சிந்தையானே. (௩)

ஏடேறுமலர்க்கமலத்தயனுமாலுமிந்திரனும்பணிந்தேத்தவிருக்கின்றான்காண், டோடேறுமலர்க்கடுக்கைவன்னிமத்தந்துன்னியசெஞ்சடையான்காண்டுகடீர்சங்க, மாடேறிமுத்தீனுங்கானல்வேலிமறைக்காட்டுமாமணிகாண்வளங்கொண்மேதி, சேடேறிமடுப்படியுந்திருப்புத்தூரிற்றிருத்தளியான்காணவனென்சிந்தையானே. (௪)

கருமருவுவல்வினைநோயகற்றினான்காண்காமருபூங்கச்சியேகம்பத்தான்காண்,பெருமருவுபேருலகிற்பிணிகடீர்க்கும்பெரும்பற்றப்புலியூர்மன்றாடிகாண், உருமருவுகொடைத்தடக்கையாளைக்கோன்றன்சங்காத்தியாரூரிற்றனியானைகாண், திருமருவுபொழிற்புடைசூழ்திருப்புத்தூரிற்றிருத்தளியான்காணவனென்சிந்தையானே. (௫)

காம்பாடுதோளுமையாள்காணநட்டங்கலந்தாடல்புரிந்தவன்காண்கையில்வெய்ய,பாம்பாடப்படுதலையிற்பலிகொள்வோன்காண்பவனைத்தின்பருவரைபோற்படிமத்தான்காண், பாம்பாடுவிடைமேற்பாகடாக்கொண்டசங்கரன்காண்பொங்கரவக்கச்சையோன்காண், சேம்பாடுவயல்புடைசூழ்திருப்புத்தூரிற்றிருத்தளியான்காணவனென்சிந்தையானே.

வெறிவிரவுமலர்க்கொன்றைவிளங்குதிங்கள்வன்னியொடுவிரிசடைமேன்மிலைச்சினான்காண், பொறிவிரவுகதநாகமக்கோடேனம்பூண்டவன்காண்பொருபுலித்தோலுடையான்கா,ணறிவரியநுண்பொருள்களாயினான்காணாயிரம்பேருடையவன்காணங்கணாளன், செறிபொழில்சூழ்மணிமாடத்திருப்புத்தூரிற்றிருத்தளியான்காணவனென்சிந்தையானே.

புக்கடைந்தவேதியற்காக்காலற்காய்ந்தபுண்ணியன்காண்வெண்ணகைவெள்வளையாளஞ்ச, மிக்கெதிர்ந்தகரிவெருவவுரித்தகோன்காண்வெண்மதியைக்கலைசேர்த்ததண்மையோன்கா, ணக்கரும்புபெரும்புன்னைநெருங்குசோலையாருக்கதிபதிகாணந்தண்டென்றறிக்கவினாந்துவருமருங்கிற்றிருப்புத்தூரிற்றிருத்தளியான்காணவனென்சிந்தையானே

பற்றவன்காணேனோர்க்கும்வானோருக்கும்பராபரன்காண்டக்கன்றன்வேள்விசெற்ற, கொற்றவன்காண்கொடுஞ்சினத்தையடங்கச்செற்றுஞானத்தைமேன்மிகுத்தல்கோளாக்கொண்ட, பெற்றியன்காண்பிறங்கருவிக்கழுக்குன்றத்தெம்பிஞ்ஞகன்காண்பேரொழிலார்காமவேளைச்செற்றவன்காண்சீர்மருவுதிருப்புத்தூரிற்றிருத்தளியான்காணவனென்சிந்தையானே. (௯)

உரமதித்தசலந்தரன்றனுடலங்கீண்டவோராழிப்படைத்தவன்காணுலகுசூழும், வரமதித்தகிரவிணைப்பற்கொண்டோன்காண்வானவர்கோன்புயநெரித்தவல்லாளன்கா, ணரமதித்துச்செம்பொன்னிறுநாம்பூணணிந்தவன்காணலைகடல்சூழிலங்கைவேந்தன், சிரநெரித்தசேவடிகாண்டிருப்புத்தூரிற்றிருத்தளியான்காணவனென்சிந்தையானே. (௰)

திருச்சிற்றம்பலம்.



## சுந்தரமூர்த்திநாயனார்.

ஆக்குதலுங்காக்குதலுமாயிரண்டுமில்லானென்றமர்க்குந்தன்சேய்
நோக்கெரியினீறுயுங்கையறமால்வெள்கவொருகொடியிற்றன்சொல்
வாக்கினொருசேயினுயிர்வௌவுகராவாவியினீர்வருவித்தோன்
காக்குமவண்டணிவுறும்வெண்கரியுகைத்தோனிணைமலர்த்தாள்கருதிவா
[ழ்வாம்.

## மாணிக்கவாசகசுவாமிகள்.

ஆசுரர்சைவந்திலெரித்தொருமூவரிடைப்பலியாதகன்றமாறன்
யாசினுளங்குலைவுறப்புத்தொருங்கொழித்தாங்கரசடிமைமருவக்கொ
றேசுபெறுமுபநிடதமெனத்துநுகர்ந்தரியதமிழ்த்தெய்வவேத [ண்டோன்
வாசகமாம்வரதமணிமழைபொழிசம்வர்த்தமுகின்மலர்த்தாள்போற்றி.

## சண்டேசுரநாயனார்.

தாதையுனக்கொருநாமேமைந்தவென்றண்டேர்தையருடைசயிலே
ன்றெறன், வேதமெலாமாங்காங்குவிதந்துலாப்பவுயர்ந்தபொருள்விதமூ
ன்றாய, பாதகமேசோறுதரப்பற்றினேன்றுணைப்பணிவோர்பைம்போ
தாதி, யாதுமொருபொருடனக்கென்றீட்டாமேபூசைகொள்வோனிணை
த்தாள்போற்றி. (௨௦)

## அறுபத்துமூவராதியோர்.

வேறு.

திருக்கைலைதனிலரனுதரிசநோக்கிச்சிவைமகிழ்வுரைத்திடவந்துலகி
றேனைத், தருக்குறுமாசைவநெறிநிறுவத்தானேர்சலம்புனைந்திச்சில
ம்புருத்தச்சார்ந்தநம்பி, யருக்கணியோனூரதிபணிசெய்வாக்கியவன்
முதல்கொண்டியற்றுதொண்டத்தொகையின்மேவி, யிருக்குமவரியல்பு
ணர்த்தம்பியாமாரண்டேரிணையடித்தாமரைகணிதமேத்திவாழ்வாம். (௨௧)

## நம்பியாண்டார்நம்பிகள்.

வேறு.

பொல்லாதவிடமுகற்குச்சண்டசபாகமுநேர்பொற்பினூட்டும்
வல்லாளனுறிசைவமரபின்மணியடியர்தொகைவகைசெய்வாழ்வு
வில்லாருந்திருமுறைபன்னொன்றாகக்கோத்தருளும்விமலன்வானிற்
செல்லாரும்பொழிறுறைத்திருநாரைநம்பிகழற்சென்னிசேர்ப்பாம். ( )

## சேக்கிழார்நாயனார்.

வேறு.

திருவருள்வாரித்தருவான்குன்றையூர்ச்சேக்கிழார்கண்மணியா
யனபாயன்வினக்க, டரவிடைதந்திளம்பருவத்தமைத்தியசேர்தமைஞா
ர்சார்பகற்றியுலகுமுதல்கொடுமெய்ந்நூலுரைத்தன், வருஞ்சூழமைமன்
றந்தணர்பூசிப்பவரங்கேற்றியரசிரட்டக்கவரிமுனாயிரர்சேவித்தோதி,
வரமதமாவூர்ந்துதிருவருண்மருவு *கிருபாவாசீசபாலுனையுட்கொண்டி
ருண்மாற்றிடுவாம். (௨௬)

## மெய்கண்டசிவாசாரியர்.

வேறு.

அருமறையின்சிரத்தெளிவாஞ்சித்தாந்தப்பேராழிகடைந்தருட்போத
வமுதமீந்த, மருமுதலைக்கறையிட்டுமெந்தினோர்க்குமறைத்தருளிவெ
ண்ணெய்நகர்வந்தவாழ்வைப், பாசறுமேனெறிபெரியர்பாங்குசூழ்ந்துப
ணிவுறத்தன்மயமளித்தபாலரூப, குருமணியைவரமணிமெய்கண்டநாம
குலமணியைமலரடியைக்குறித்துவாழ்வாம். (௨௭)

## அருணந்திசிவாசாரியர்.

புலவேடர்புகுந்தரசபுரியுநெஞ்சப்புலத்தூயவொரும் †பொறிவாண்மெய்ப்பு
லக்கையேந்தி, விலகாமற்றவரொழியவீட்டிக்காமவிலங்காதிகழுந்தரு
ளாம்வேலிகோலி, வலமாருமன்புவித்திச்சிவமார்போகமல்குபாமுத்தக
லம்வாய்ப்பவாய்மை, நலமாருஞ்சிவஞானசித்திதந்தநாதனருணந்திபத
நயந்துவாழ்வாம். (௨௮)

## மறைஞானசம்பந்தசிவாசாரியர்.

குலமறையோர்சிரமணியைப்பரத்துவாசகோத்திரஞ்செய்தவப்பயனை
க்கூறும்வேதத், தலைபழுத்தகனிபிழிந்துகோதுநீத்தசாரமைவகுத்தாக்
தத்தனிப்பேரின்ப, நிலையமுதந்தனையடைந்தார்க்கருளிஞானக்குறிபீக்க
ணத்தாலளித்தருளுநிமலவாழ்வை, கலிநிறையுமறைஞானசம்பந்தப்பே
ர்நாயகனைச்சேயடியைநயந்துவாழ்வாம். (௨௯)

---

* கிருபாவாசீசர் - அருண்மொழித்தேவர்.

† பொறி - எழுத்து.

## உமாபதிசிவாசாரியர்.

எளியேன்யான் குடியாருக்கெழுதுசீட்டென்றேகவெகுவசனத்தாற்றா
ழ்த்தியேற்றி, விளியாதபரமுத்திகொடுக்கவென்னும்வியங்கோளின்வே
ண்டுகோள்விளங்கவேத, மளியாநின்றோலமிடவயன்மாறேடவரியபிரா
ன்றனிக்கவிசெய்தன்புகூரு, மௌளியாருமுமாபதிமெய்ச்சிவன்றாள்
போற்றுமுழுவலன்பர்கழல்களன்பினுவந்துவாழ்வாம். (உஎ)

## பட்டினத்தடிகள்.

வேறு.

அருந்துறவாணிவெண்காட்டடிகளங்கமலனன்றோட்
டருந்தனியிலிங்கமேற்றசற்குருதாவின் ஞானப்
பெருந்தகைமருதவாணர்ப்பிள்ளையாப்பெற்றவாழ்வு
இருந்துபூம்பட்டினத்தெஞ்செம்மறாள்சிந்தைசேர்ப்பாம். (உஅ)

## அரதத்தாசாரியர்.

வேறு.

திரிபுரத்தார்சிவநியமநீத்ததோடஞ்சிந்துறமால்வந்துதித்தானெனமுற்
றோன்றிப், பரதவிதமுணர்த்தவருபொதுநாறுனும்பதிசிவனென்றஞ்ச
லியாற்பகர்தல்காட்டித், திருகுமணவைணவர்க்குநேமிநாமத்திறந்தெரி
த்தாங்கரதத்தரெனும்பேர்தாங்கி, யெரியிருப்புப்படியேறியவர்கோள்
வீட்டியிலகுசைவநாட்டியருளிறைதாள்போற்றி. (உகூ)

## தேவசிகாமணிதேசிகர்.

வேறு.

அவனியின்மும்மலர்க்கருளவருருக்கொண்டருணையில்வந்தமர்ந்துமே
னோர், புவியுருவென்றுள்கியிடர்ப்புகாவகைதன்சீர்ப்பெயரோபுணர்ந்துத
ற்சேர், பவர்பெயர்முன்விகாரமுறப்பண்ணியவர்விகாரமெலாம்படுக்கு
ம்வாய்மைச், சிவகுரவசிகாமணியாய்த்திகழ்தேவசிகாமணிதாள்சென்
னிசேர்ப்பாம். (௩0)

கடவுள்வாழ்த்துமுற்றிற்று.

ஆ-திருவிருத்தம்-௩௪.



குன்றெதிர்கூப்பிடுமாபோலோங்குவித்துக்குன்றடக்குதமிழ்மலயக்கு
ன்றக்கோமா, னன்றுரைத்தாலென்றுரைத்தகுதன்வாக்கையடியேனி
ன்றுரைத்தனனீதமலன்காதை, வென்றிதருகுணநாடிக்குற்றநாடிமி
கைநாடிமிக்ககொளுமென்மையோர்க, ளொன்றிதனைக்கொள்வரன்றிந
வையேபாய்வார்நயக்கவிகளியற்கவிக்குரவிஸ்வாரன்றே. (௮)

இணைதவிருமியற்றமிழ்நூற்புலவர்கற்பார்க்கெடுத்துக்காட்டிலக்கியங்க
ளினையபுதோன்றக், குணமருபாவினமன்றேகுற்றம்யாவுங்குறித்துணை
ருமிலக்கியமுங்கொளுத்தற்கிந்நூன், மணமுடையதாகலிற்சொல்வாக்கி
யார்த்தம்வாக்கியைபுதொடையிசைகண்மற்றுமெல்லா, மெணவரியகு
ற்றமுடைத்தென்றுதள்ளாதேன்றுகொள்வொறுத்துணிவாலியற்றினே
னுறல். (௯)

மாற்றமொன்றுசொலச்சொலித்தம்மகவம்மாற்றம்வயங்காமையுரைப்ப
மகிழ்பிதாக்கண்மானச், சேற்றமிலேற்குணர்த்தியவன்பெருண்டநாதன்
றிருவாலவாயமர்மெய்யப்பனெம்மா, ருற்றுபணிகொண்டடியென்முடி
யிற்சூட்டுமாறுமுகநாவலர்கோனவன்முட்கண்பே, போற்றுவழியந்தவி
மற்சரமெய்ச்சிலர்புந்திமகிழ்வுறுவொன்சொற்புன்மைநோக்கி. (௧௦)

வேறு.

காண்டகுபுந்தூர்வடசொன்மான்மியத்தைக்கவின்கொள்செந்தமிழ்
மொழிபெயர்த்துச், சேண்டவழ்மதிசேர்வேணியன்றேவசிகாமணிசிற்ச
பைப்புரியுந், தாண்டவராயசிதளிநாதன்சந்நிதிதனிலரங்கேற்றித், தே
ண்டரும்பெருமைபூண்டனன்காதைத்திகழ்சொக்கலிங்கதேசிகனே. ()

பாயிரம் அவையடக்கம்

முற்றிற்று.

ஆக இருவிருத்தம் - ௧௧.



# திருநாட்டுச்சிறப்பு.



திருத்தகுபுராத்திற்சிவபுரமனுவிற்செப்புமைந்தக்கரநூலி
னுருத்தகுநிகமாகமமியவுளரிஞுமாபதிமதங்களிற்சைவ
மருத்தியிசனுக்காந்துதிகளினருட்பாவாம்பணிகளிற்சரியாதி
திருத்தியம்போலச்சிறந்ததுபாண்டிக்கேரளசிங்கநன்னடு. (௧)

எம்மைநீயெடுப்பாய்கௌரியையுலோபாமுத்திரையிழையுக்குமென்னவீசன்
பொய்ம்மையின்மாற்றமுகமனென்றெனையார்புகன்றிடாதானுஞ்செய்
செயலான், மெய்ம்மையேகாட்டுமுனிவையிமேற்கொண்டக்கைலையேவி
ழையுமாமலய, நன்மலையதனைத்தன்னிலைக்கண்டெங்கோட்டிறைஞ்சி
றந்தஇக்காடு. (௨)
[ய்

இறையிலக்கணஞ்சொலியையிருஉமனைவியிறுகால்வர்யாக்கியருஞ்செ
நிறைபலற்புதத்தாலினிமையென்பொருணிலவுமியோகருடிப்பே
ரறைதலாற்கொங்குமதிபுலகன்பினைத்தினைதிலையாடியார்முன்
மறையருள்வாக்கீதவின்வடசொலினுமான்டமிழ்வளர்வதிக்காடு. (௩)

எரிமணிமகுடபங்கமுற்றேநிடியெறிவியையருள்கௌவிசித்தாங்
கரிபெறீஇயாஞ்சைஞவழிமைறபொழியுமாடல்சாலாலினர்முனிவு
பரிவகல்வாதபுரோசர்தாம்பாண்டிப்பதிகமுன்றுறையலாவுள்
வரிசையின்விதந்துபுகழ்ந்துசொல்வழுதிமாரினர்புரப்பதிக்காடு. (௪)

குருக்களெவ்வெவர்களவர்க்கெலாமூலகுரவனாயமர்ந்தருளால
விருக்கநன்னிழலோன்சீடனாய்ப்பணிவுமென்மையும்புகன்றருட்பாக்க
டிருக்கரஞ்சிவப்பவெழுதியமொழிதமிழ்மணிவாசகப்பெருமான்
பெருக்கருணீதியமைச்சியனடாத்தப்பெற்றதிக்கொற்றநன்னாடு. (௫)

அரனமர்தலங்கள்பற்பலவுளவெத்தேயமுமாயினுமிதன்பின்
விரிவுறவமைத்தபுதியனவவைகள்விண்மைசான்முன்மையதிதுவென்
பரிசுணர்சான்றாய்ப்பாண்டிநன்னாடேபுறம்பதியாகவென்றெமையாள்
வரதநன்மணிவாக்கடிகண்முன்பரசுமஹிமைமிக்குடையவிக்காடு. (௬)

கயிலையிற்பரமகுரவன்வாய்மலர்ந்தகட்டளைமறந்தமைகருதாப்
பயிலுறப்புகன்றசாபமேற்கொடுபாடணைத்தின்படிவுறுமியக்க
வயில்விழிமடவாரறுவரும்யாண்டுமகற்றருந்தீங்கெனிதகன்று
நயனுறுமட்டசித்தியெம்பெருமானல்கிடப்பெற்றதிக்காடு. (௭)

கூடலாடானைபூவணஞ்சுழியறிருத்தலங்கானைகுற்றால
மேடகமாப்பனூரிராமேசம்பராசலம்பிரான்மலைசாலி
வாடியேவாதபுரிபுனவாயின்மங்கையேபெருந்துறைபாவந்
சாடுமூர்முதலாத்திருவருட்பாக்கொடலம்பலநிறைந்தஇக்காடு. (௮)

குலத்தினிற்பொறையிற்றிருப்பணிச்செயலிற்குணத்தினின்மாணத்திற்
கல்வி, வலத்தின்மெய்வாக்கிலெவற்றினுஞ்சிறந்தவணிகர்கள்சென்னி
நாடிகந்து, நிலத்தினிலுயர்ந்ததரணருணிறைந்தநீதிசேர்கௌரியர்புரக்
கு, நலத்தினிலுயர்ந்ததெனக்குடிகொண்டுயர்ந்துவாழ்வுறுவஇக்காடு.

---

* என்று - பெயரொச்சத்தகரந்தொக்குநின்றது.

இளைப்பகற்றகரங்கணேசமாநகரமிரணியபுரம்வீரவப்பேர்
வளப்பதிநேமமதுகமாபுரம்வேலவன்புரிசூரைபொன்மாற்றூ
ரளப்பிலிவ்வொன்பான்சிவாலயங்களுமவ்வணிகராகமவழிப்பூசை
யிளைப்பருநிதிகொண்டங்களூன்றுளுற்றக்கிளர்வுறப்பெற்றதிந்நாடு. (௧௦)

வேறு.

மன்றிறைவன்றிருவருள்சாரந்தணருளொருவர்மற்றவனைப்பெட்டகத்
துள்வைத்தவுமாபதியார், குன்றைமுனிபதவணக்கமேயமலமோக்கங்
கொடுப்பதெனவழுத்துபுசரிதஞ்சொலருண்மொழித்தே, வன்றருநார்ம
ன்னுசிக்கைதநற்றுறைப்பன்மாந்தரவர்போற்றும்பார்மனுதொன்மைப்
புகழ்பூண்டதுநீர்த். தென்றமிழ்நாடென்பதூஉமுற்பட்டவிடைவிதவாச்
செப்பிநிகழொப்பனைசெய்திப்பியநாடிதால். (௧௧)

வேறு.

இன்னபோல்வனபற்பலவற்புதத்தியற்கை
யென்னநாட்டினுமில்லனவுள்ளனவீசன்
றன்னலீலைகண்மலைமலையாகவேசார்ந்து
மன்னுகின்றனவிதற்கிணையாங்ஙனம்வகுப்பாம். (௧௨)

தலைமைபெற்றுளநால்வகைச்சாதிகடத்த
நிலையினீங்கலாநியமநல்லொழுக்கொடுநிலாவி
யலகில்பன்னிதிகளுநிறையகரங்களவையும்
வலனையாவுருப்படுத்தவனுலகினும்வயங்கும். (௧௩)

எங்குமாலயமெங்கணுமகோற்சவத்திட்ட
மெங்குமாமறையெங்கணுந்திராவிடவேத
மெங்குமாகமமெங்கணுமெய்கண்டநூல்க
ளெங்கும்வேள்விகளெங்கணுமிவர்செலுமிரதம். (௧௪)

எங்குமாநதியெங்கணுமெந்தைவாழகல
மெங்கும்வாவிகளெங்கணுஞ்சூழ்மலர்ச்சோலை
யெங்குமன்றல்களெங்கணுமியமியம்பியற்சீ
ரெங்குமாதவரெங்கணுமடாலயச்செறிவு. (௧௫)

எங்குமோதனசாலைகளெங்குநீர்ப்பந்த
ரெங்குநீதிமன்றெங்கணுநூல்பயில்கழக
மெங்குநீர்வயலெங்கணுநிறைபசும்பயிர்க
ளெங்குநீள்விளைவெங்குநெற்போர்களின்பிறங்கல். (௧௬)

மூலமாகியபகுதியின்மூக்குணத்தொகையின்
மேலவானின்முன்வெண்மைபின்கருமைமின்னிலைமை
சாலவேற்றுவானேற்றுவான்றடத்தினிற்படிந்த
நீலவாடைபூமகண்முலைக்கொண்டுறுநிலைபோல். (உரு)

தனதுவெம்பழிபாற்றுசுந்தரப்பெருந்தகையா
ளினியநாட்டினைத்தெறப்படர்மறப்பசுவினைக்காய்
புனிதநந்திவெற்பென்றரிபோற்றியாட்டுதெல்போற்
றனிதவானமக்கிரியினிற்றுரைகான்றனவால். (உசு)

ஏகமாயெழுந்துவரிநீரொடுகலந்திரவி
யீகவிந்துவித்துத்துவாய்ந்தொருங்குநீர்விடுத்த
மேகமாணியையமனையனைவெற்பமர்விபின
மேகலந்துநோற்பான்றனைத்துறவியையிழையும். (உஎ)

வெற்பிடங்களிற்பொழிந்தனவெண்ணகையரும்புங்
கற்பிடங்களிற்பொழிந்தனகனிவளம்பணைசூழ்
பொற்பிடங்களிற்பொழிந்தனபுனலரசமரு
மற்பிடங்களிற்பொழிந்தனவமைவிலார்கொடைபோல். (உஅ)

யாரும்யாவுமின்குளிர்ச்சியொத்துறச்செயுமெழிலி
யாருமன்றலினருட்கொடைதெரியவாங்கெவர்க்கு
மோரும்வாசகதீக்கையென்காதல்வாக்குதவி
நேரிலின்பருள்கௌணியர்குலமணிநிகரும். [உகூ]

விரியும்வெண்டுகில்போர்த்தெனக்குளிர்க்குவெள்ளருவி
பரவும்வெற்பெலாமன்னதுபடர்ந்திழியசைவு
மரவமுங்குளிர்பின்னருமாற்றெருணுதுடற்கண்
வருநடுக்கமுமதிற்படுமொலிமெனவயங்கும். [௩0]

சோதிமென்கொடிபடர்தரத்தூயவெண்பிறைதான்
மீதிலங்கவெம்பணிபலசூழ்தரவிளங்கும்
பூதரந்தனினின்றிழியருவியப்புராரி
சீதமாமுடிநின்றிழிகங்கையிற்றிகழும். [௩க]

வேறு.

ஏற்றுவெற்பதனினருவியாய்நதியாயிருநிலத்தொருகுலப்புனமேல
பாற்றெருகுளங்காலோடைமுற்பலவுட்பரம்பியவ்வப்பெயர்த்தாகி
நாற்றிசைபரவச்செலுமரனுயிர்கணலமுறப்பலவுருநயக்குங்
காற்றனியருளாஞ்சத்தியையடுத்துக்கருதுபல்பெயர்கொளல்கடுப்ப.

இடபநன்மலைநின்றெழுகுமிந்நீத்தமிணையில்சீர்நவைபுரித்தெனப்பாற் [இ
படநடந்துலகமணிமுத்தநதிப்பேர்பகர்தரப்பட்டார்ந்திடவடபால்
விடுசிலையெனும்பேர்நதியுமொன்றதன்பால்விரவிவந்திரண்டுமொன்று
நடவுமாற்சிவமுஞ்சத்தியுமொன்றாய்நலந்தரக்கலந்துறுநயம்போல். ()

பிரசனவதனமலர்முகந்தலையம்பிறைத்தெனவருதலாற்பாராங்
தருமிகுதரமைந்தறனிறைபாணிதாங்கலாற்கயமுகன்குகன்மா
திரமுறுசீர்மாமையின்மருவுறலாற்றிருக்கைவாமயிலையேந்தலால்
வரனமரமலையமலையின்வரலான்மலையுமந்நதிப்பிரவாகம். (௩.௫)

அம்பிகையிடத்தாலம்மலங்களைவாலலைதருமேனத்தின்கோட்டால்
வம்புறுமுலைமுன்னுழைதருமார்பான்மலையுமான்மணியிடற்றவனை
யும்பரந்தரங்கமுறப்பரவுதலாலோதிமாசலந்தருமரபாற்
கம்பலைநலஞ்சார்களத்தினுளுமையைக்கடுக்குமவ்வடிக்கலங்கலுழி. ()

மாறருநீரான்மலரினுதனத்தால்வழங்குபாரதிகொளுறையா
லேறிவரோதிமத்தினில்வரலாலிரணியகருப்பனையிறையும்
பாறுகைத்திடலாற்பாலனமுறலாற்பரவுபொற்றிருவமர்நிறத்தா
னுறுதண்டுளவம்புயமலர்தரலானாரணன்போலுமந்நதியே. (௩.௭)

மேகமார்கவியின்முகந்துபெய்தருமிவ்விரைநதிபுவியெலாம்விரிந்து, நா
கமாரிடம்வேறிலாமையாலோடிச்சலதிசேர்ந்தொன்றியதாய்மேதியக
மாயெங்குநிறைந்துநெய்திரண்டாங்கின்னுயிர்க்கருளவவ்வவற்றின், றே
கமேதான்கொண்டிடினும்பரன்றன்றிறத்தின்வேறுறாதமர்செயலின்.

நலிதருதழலாய்முரம்பையேமருவிநண்பகற்காலையாம்பாலை
சிலைமுகில்பெருநீர்பொழிதலுமுழுதுஞ்சிதைந்ததுதீமையேயுருவாய்
மலிபுகழ்நிறையிந்நாட்டின்முன்னொருகான்மாசறப்படாமண்காழிக்
குலமணிதிருவாக்கமுதமாமழையாற்குலைந்தொருங்கழிந்ததேபோல. ()

கோதையருரைக்கொவ்வாதுடைந்தனபோற்குயில்கள்வாயடைப்ப
னகுவளைப், போதுகண்காட்டத்தளவுகணைகைப்பப்புனமயிலினமுளம்
பொருந்துங், காதரமொழிந்துகாதரநிறைந்துகளிமிகவகவுறக்காளுவித
ருமவர்போற்சம்மியாகங்களிலங்குபொன்சொரிவனயாண்டும். (௩.௯)

வென்றிமால்விடையோன்வீற்றிருப்பதுவுமேவுதன்றாய்பிறந்தகமு, ம
ன்றலார்கோதைவள்ளிநாயகியைமணந்ததுங்கனந்தருவரைக, ளொன்ற
வாஞ்சையிறேவெயினர்சீர்விழாக்கொண்டேத்துமக்கோத்திரக்கிறை
யாய்க்,குன்றுதோறாடல்புரிந்தமையானுங்குமரவேளமர்தருங் குறிஞ்
சி.

அருவியுண்மூழ்கிநீறணிந்தெனமற்றதுபரவுறப்பெறீஇயளியாம், வரன்
விழிமணிபூண்டசைவறநோற்கும்வாய்மையான்வறப்பினும்வளமே,

தருவரையினங்கண்முருகருள்சார்ந்துசதமகற்பொரவெழுந்தனபோன்
மருவுறவானிற்கரத்தமர்க்கழைக்குமாறெனவரையசைந்தொலிக்கும்.

இறவுளராண்டைவணங்குறித்தாரமெரிமணியாதிதொட்டெறிதன்
மறையுபநிடதமியாவுமெண்ணில்லாவாய்மையாற்பதியிலக்கணங்க[றும்
ளறைபொருள்சிவனேயெனக்குறித்தென்னெஞ்சகன்றிடாநாவரசாற்
விறலுழவாரத்திருப்பணியதனைவிழைதரநினைப்பிக்குமாங்கே. (சஉ)

ஆரநீள்காண்மேலாம்பல்வெண்மருப்பார்ந்தமைதருமிதணமரெயினர்
நாரியர்குரலார்பலாசனந்துரப்பநண்ணியாயோவெனவிசைத்தாங்
கேரியலரிதமரதனந்தரளமெறியவுமினத்திசைகுவித்துச்
சார்சிறையினங்கடங்கனியமலைதாமெனவணிமையிற்சார்வ.
[ண்கோ
வெள்ளிடைவெயிலிற்றன்னிழல்காணுவெருண்டுபோய்ந்தவனியின்வெ
டுள்ளுறக்கீண்டுசென்றுசென்றிடமாங்குயர்கணிநீழல்புக்குறங்கு,மள்ளி
ருண்மலந்தான்வேறுகண்டளவினப்பகைதெறும்வகையாற்றித், தெள்
ளுநன்னெறியிற்சென்றரனடிக்கீழ்ச்சிவானந்தமடைக்குநர்செயலின்.

பெருவலிமறவர்கயமுனிக்குலங்கள்பிணைத்துவிட்டேனலின்பெரும்
போர், சரிவுறப்பரப்பியவற்றினூலாசுதனைத்தியத்தானியங்கவர்வா, ரரு
மணிமிடற்றோன்மாயையைப் புணர்த்தியாருயிரிடைப்புணரழுக்காங்
கருமலமகற்றித்தூய்மைசெய்தவற்றைக்கவர்ந்தடியிருத்துதல்கடுப்ப.()

அருவரைமிசைக்கீழிழிவதுமருவியாங்குமேலெழுவதுமருவி
குரலரிகுறியாய்மலர்வதும்வேங்கைகுறவர்களுடுப்பதும்வேங்கை
தெரிவையருதைப்பமலர்வதுமசோகஞ்சேர்ந்தவர்சிந்தையுமசோகங்
கருமுகினிகருங்குறத்தியரளகங்கார்முகில்பொழிவதுமளகம். (சசு)

மலைவருங்குறவர்மாற்றமுங்கடியமாதர்களோதியுங்கடிய
கொலைவருநிலையவிழிகளுங்கொடியகோப்பமைசாப்பணுங்கொடிய
மலர்தழைநாகநிதம்பமுநாகம்வகையணிநகிலமுநாக
நலநிறையினியமொழிகளுங்கிளைகணயமுறுபுயமும்வண்கிளைகள். (சஎ)

இனிதுறப்படைத்தல்புறந்தரலழித்தலென் றிவற்றிடைத்தொழில்செ
யலா, னனிமகிழ்ந்ததனையுயிர்க்கெலாம்பொதுவாய்நவிற்றலாலிடைய
னற்பொதுவ, னெனவுரைதருமாலப்பெயருடையாரிந்நிலத்தவரொன
வெண்ணு, முனிவறவனையநிலக்கிறையாகிமுதமிகப்பயில்வதுமுல்லை.

வானுறுமண்டர்தாரொருபாலைமதித்தமுதளித்திடவாழ்வார்
கானுறுமண்டர்மகளிர்தாம்பாலைக்கடைந்திழுதளைநவநீதந்
தானுணத்தருவாரன்றியும்பிருந்தைதனைமண்ந்துவத்தலுந்தகுமா
லானபானரலையோபுவிவனமோவாங்கவற்கார்வமிக்களிக்கும். (சகூ)

காசையாங்கொருபாற்செருந்திமற்றொருபாற்கடிமலர்செறிந்துமின்றிட
தேசமர்பலாசமிடைமதிமுடிமேற்சேர்வுறத்திகழ்கருமுகவொன்               [ப்பூந்
றூசறுநிழற்கீழுறங்குறவமர்தலரியயற்கிடையனல்லெழப்புங்
காசறுமிரண்டெந்துருவிடுமேனத்தெதினத்தின்காட்சியுங்காட்டும். (௩௦)

மறைத்தகார்முகிலைத்தூரத்த லுஞ்சூறையெங்குமோர்சோதியுத்தாரு
மறைத்தகாரொழினிவாங்க லுந்தனியின்வயங்குமாதிப்பெமைனு, மறைத்
தனித்தொளியையவயக்குமச்சூறைமாணவிராணைமாய                [வயங்கும்.
மறைத்தனித்தவர்மெய்ப்போதமன்விளக்குமாண்மையோரொன்னவும்

பொதுவனோர் புதல்வன் வங்கியமிசைத்தோர்புடையுறப்புதுமதியிசை
மேற், பதிவுறப்புதுப்பூந்தளவமேற்படர்ந்துபாதியாவரிப்பவோர்சிறமே
ற், கதுவுறவமர்பூங்கடுக்கையிந்தொருவாக்கற்றையேனியனுமையோ
டும், விதிதவாறுயர்குழலிசைகேட்டெவிடையின்தணியுறல்விளைப்பும்.

பன்னிறவேனல்சாமையெள்ளிறுங்குபகருநீன்மாடமுற்காதி
மன்னுதானியங்கள்பலநவமணியின்வரையினைமனத்திகழ்தருபிற்
நன்னிலமாக்களென்றுமீதியங்கிரவிமுதற்கோள்கருக்கொங்கி
யன்னவைக்குரியமணிகளினிளைப்பாற்றுதனமமைத்தனரென்னா.      ( )

வேறு.

ஆய்ச்சியர்குழலங்காசையவரிடையாயர்க்காசை
பூச்செறிகடுக்கையாசைப்புறநிறம்விரியுமாசை
காய்ச்சுபால்கடைதந்தேங்குங்கலிதிசையெட்டுந்தேங்குந்
தூச்செறிதளவுநாறுந்தூரெலாங்கிரநாறும்.      (௩௩)

முலைவருகுடத்திறாரமுலைவருகுடத்திமார்தம்
பலினிரைதளவைநேரும்பரந்துகாதளவைநேரு
மலர்விழிகளவையேயுமாண்குழல்களவையேயுந்
சொலுநடைபிடியையாருந்துவளிடைபிடியையாரும்.      (௩௪)

வேறு.

நகவினைபுரிந்தாங்கவியெமக்குதவுமறையவராதியெவ்வுயிர்க்குந்
தகுமுணவளித்தந்நிலைநிலையுறத்தூர்ந்தைகத்தெனவமரர்கடலைவன்
மிகுவளம்பொலியமழைவளம்புரிந்துமேவியாங்கியாவரும்வீழ்ந்து
வகையுறவணங்கநணியுளமகிழ்ந்துமன்னிவீற்றிருப்பதுமருதம்.      (௩௫)

அணிவளைபதுமங்கற்பகமூருவரம்பையரிமையவரணிக                [ம்
டிணியொளிசிந்தாமணிமுதற்பொருளாற்செவணிறுமுவகையைச்சிறக்கு
பணிலமென்பழனப்பயிரிறுல்யாண்டும்பச்செனப்பரந்துநீதளமாய்க்,
கணினயம்புணர்த்துஞ்சிரிதென்றுடலக்கண்ணன்வாழ்தருதகைமருதம்.

மேதிபுக்குழக்கவெடிசெலும்வாளைவிண்செலுமிலாங்கலிமிடற்றின்
மோதமுப்புடைக்காய்வீழ்த்தியவ்வாவிமுழுவதுநிறைக்குமத்தெங்கு
போதமிக்குடையார்தமக்கிடர்சிறியார்புரியினுமவர்க்கிடர்புரியா
தேதமற்றவர்பின்செயாவகைதடையாங்கியற்றுறுமியற்கையேபோல.

அளியினங்குழுறுமொளியசெங்கமலமலர்ந்தைகடொறும்பலவலர்ந்து
தெளியதண்கமலமேலொளிர்காட்சிசிவனத்தா*ளமாநின்
றுளமிகுமளியோடுருத்திரம்புகன்றவுருத்திரபசுபதிப்பெயர்வாய்ந்[கும்.
தொளிருமெய்யன்பர்பல்லுருவெடுத்தாங்குற்றணர்கொல்லெனவோங்

கண்ணுறார்முன்னரிலாங்கலிகமுகைக்கமுகெனார்மற்றதுகாணா, ரண்ண
லங்கரும்பைக்கரும்பெனார்காணாரதனைநெல்சாலியென்றறையா,ரெண்
ணாபின்னையதைமுன்னதாமகிழ்வரெய்திற்றேபெரிதெனுமவர்போ
னண்ணாபல்சமயத்ததுவதுபெரிதாநயக்குறுமயலவர்போல. (௩0)

கழைமணிநிலந்தோய்கைக்களிற்றுலவைக்கதிர்மணிமலைபடுவயிரத்
தழைமணிநிலங்கீழ்களிற்றுவெண்மருப்புத்தருமணிமாசுணங்கான்ற
விழைமணிமுதலபலமணிவரன்றிவேங்கைசந்தகருமுன்சாய்த்து
மழைபடுசினைமேற்கொளவரிக்கொண்டுவருநிறைமணிமுத்தநதியே.

மலைபடுநறவமுலைபடுகிரம்வண்டயிரிமுதுவண்பழனக்
குலைபடுகழையிரதமிவைவாரிக்கொண்டிரைந்துவரியுட்புகுத
லலைபடுமணிமுத்தாறுதான்கடல்களாறுமேற்சென்றுவர்க்கடலி
னிலைபடுமுவர்நீத்தெழிலியையொழிந்துநேர்கொடைபுரிகெனனிகரும்.

விடுசிலையாறுமணிமுத்தநதியும்விரைந்திருபானவபுரிதா
னிடையுறநடந்துகுணக்குறீஇயொன்றாயேகுதல்சீதளியிறைபைந்
தொடிசிவகாமியிருவர்பாலுயிர்கள்சுகமுறத்தோன்றருட்பெருக்கே
நடவுமொன்றாகியென்பதல்லாதுநாம்பிறிதுரைப்பதொன்றிலையால்.

உரப்பிரவாகங்காணுபுமள்ளருள்ளமிக்குவகையர்கிணையி
னிரைப்பொடுவறுமைப்பகைமுடித்திடுகூழ்க்கிதந்தரமடைதிறந்தியக்க
வரைப்பறுகால்களிடைப்புகுந்தனையவான்பயிர்வளர்க்குமந்நீத்தங்
கரப்பறுவழுதிபடைக்குநீரளித்தகண்ணுதல்கமண்டலங்கடுக்கும்.
[போ

அலப்படைபுயங்கொண்டளைமுதற்பாடியயின்றவனயந்தமுன்னவன்
னலப்படுகிரிற்போய்த்திருத்தலத்திறைசெய்நடநினைந்தனர்நடிப்பவர்
போ, னிலப்படவொருகாலூன்றுபுதூக்கிநின்றொருகாணுகத்திருபால்
வலப்பகட்டெருத்தினைமைத்தனர்பூட்டிவரம்புறவுழுவரான்மள்ளர்.

* ஆ-வரையுமென்னும்பொருட்டாய வடமொழி.

வேறு.

அலநுதிதேய்வுறக்களமராழமுறவுழவாரம்வளிதமேற்று, நிலனுரிய
பொறையெனுங்காரணப்பேர்தாளிடுகுறிபோலிகழ்வாய்க்கு, நலமதனு
க்கிசையநனிபலன்றருமக்கழனிகளினயனுங்கெண்ணிப், புலனுறப்பின்
னிதஞ்செய்வார்போல்விரைந்துபரம்புகைத்தொப்புமைசெய்வாரால்.

வால்வளைகள்சால்வழிச்சென்றுழவர்காக்குதவிபுரியெல்கடோறுஞ், சே
ல்வளையங்கணத்தைநவநீதமெனப்பதப்படுத்தித் தேவர்கோமான், கால்வ
ளையுமுளத்தினராய்க்களமர்நன்றாட்கொண்டுவிதைகாத்திற்கொண்டு [ர்
கோல்வளைக்கையுழத்தியர்கள்குரவையிடவித்துவிழாக் குலவைச்செய்வா

தெளித்தவிதைகான்முளையைக்காண்முளையிற்கண்டுழவர்நிறப்பவுள்ளங்
களித்துரியதொழில்புரியவிதழ்விரிந்துவளர்ந்துமரகதத்தின்று
வளத்தகடுபதித்ததெனப்பாவாற்றிநிரைத்ததெனவம்பலோர்கள்
இளைத்தொருநாட்டிடுங்களெனவுழவர்களழப்புதலித்தெனக்கிளர்வசாலி (௯௰)

உளமகிழவொருவாமலுடனூட்டிவளர்த்தாலுமொருபுதான்டு
னளவுநிற்றம்புதல்வியரைத்தம்மனையினகல்விக்குநிருர்போல
வளருமிளஞ்சாலிகள்பேர்த்திடும்பருவமருவுதலுமள்ளர்மாதர்
விளைவுறுநாற்றங்காலிற்கடிவினையைக்கடிவினையம்விளங்கச்செய்வார்.

தத்தமநற்பயனுதவாவேளையிடங்களில்வாளாசார்ந்துநின்ற
வுத்தமநற்கோள்கணற்பார்வையினெடுமேகாதசத்தினுறுமாபோலக்கை
த்தலத்திற்பறித்துநடவுறுஞ்சாலிவளர்ந்தொன்றுகணக்கின்றாகும் [ம்.
வித்தகர்கைத்தானமெனப்பின்றருபல்வளன்குறியால்விளங்கக்காட்டு

வயலுழவர்பதம்பகரக்கடைசியர்கண்முதலவையவைங்களைகருஞ் [ம்
செயலெவனும்முரங்காண்டுமெனத்திருகுனைஞ்சேக்குவிக்கையார்போ
பயமருவுநீலமுன்னுமருவலரைப்பாற்றியசெல்பரிவேறாய் [ல்.
வியல்வளைவென்றிடுமொலியின்மிகமுழங்குகழனியெங்கும்விரவிறாா

உலகமொருங்கருடாதையொளிர்குரவன்வேதியனென்றுயர்ச்சிபூண்ட
தலைவன்மலர்க்கட்குடியன்சாற்றுமவன்முறைதயிலைடச்சாதியானை [ன்ப
வலிகொடுசெய்செயல்பலவெம்மகபதிவெள்ளாம்பன்மிசைகூர்த்தனை
நவனிலதென்றெவரிகழ்வொன்பார்போன்றுறுகள்ளுணயக்காரன்றோ
[ர்.
கனதனத்தைநிகர்வதிவட்காண்டுமெனச்சினந்திருவிக்களமர்மாதர்பினைவ
ளைக்கையாற்சாய்த்தாங்கீர்ம்பிழிசார்குடஞ்சாய்த்திட்டிலங்குவள்ளத்தகு
ளையும்வசியாற்போழ்ந்தகைமையினம்மதுவாக்கித்தங்கைக்கொண்டாங்
களையமதுச்சிறுதுளிதொட்டயலெறிந்துவாய்மடுத்திட்டியல்பமன்றோ.

மேவுமாறெனவேண்டவப்
பாவைபாகன்பரிந்துளம். (௫)

சூலவேலினிற்குன்றுதா
னெல்லைவயொன்றங்கியற்றுபு
ஞாலும்வேணிமற்கங்கைநீர்
மேலுமாங்குவிடுத்தனன். (௬)

அந்தவேதுவினத்தடங்
கந்தமார்சிவகங்கையென்
றிந்தமூவுலகுந்தொழச்
சுந்தரப்பெயர்துன்னிற்றால். (௭)

ஆயமாசிவகங்கையி
னேயமார்தரநேர்புநீஇத்
தோயுமாந்தர்கடுன்பெலா
மாயவின்பொடுமென்னுவார். (௮)

இத்தடத்திணையெண்ணின்மற்
றெத்தடத்தினுமின்றிஃ
துத்தமத்துயர்தீர்த்தமே
யத்தனாணைமெய்யறவிர்காள். (௯)

அன்னவாவியிலமரரும்
பன்னுபாதலர்பிருகுவு
நன்னர்மூழ்குபுநலனெலா
மன்னிவாழ்ந்தனர்மாதவிர். (௧௦)

யானுமப்புனலெய்துபு
மானவன்பின்மகிழ்ந்துதோய்ந்
தானவெண்ணமுற்றுக்கிடேப
யீனமின்னலமெய்தினேன். (௧௧)

வேறு.

இந்தமாநலஞ்சான்றமாதீர்த்தந்தோய்ந்தியங்கும்
வந்துவந்துசார்சராசரசீவர்கள்வானோர்
தந்தலைக்கொடுவணங்கியேதம்பணிகேட்ப
முந்துமாண்சிவகணத்தராய்வாழ்குவார்முனிவீர். (௧௨)

நண்ணிநோக்குநர்திவலைதம்மெய்யுறாநலத்தோ
ரண்ணலார்சிவகங்கையையங்கையாலள்ளி
யுண்ணுவார்படிகுநர்பெறுபலமொன்றுக்கொன்றாங்
கெண்ணின்மேம்படும்விரிப்பதெனுண்ணறிவினார்க்கே. (௧௩)

தேசமிக்கெழுமப்புனறோய்ந்ததன்றிருத்த
ஈசனார்திருமுடிமிசையெடுத்தினிதாட்டு
நேசர்தாம்பெறுபலத்திணைநிகழ்த்தலென்னிமலன்
வாசநாண்மலரடியவர்காணியாம்வாய்மை. (கச)

இன்னுமத்தலத்திலங்குறுமருட்கௌரீசன்
றன்னையுத்தரதிசையினிற்கௌரிமுன்சமைத்த
மன்னுதீர்த்தமொன்றவடிருட்பெயரினால்வயங்கும்
பின்னரத்தடங்கமலையாற்சிதளிப்பெயர்த்தாம். (கரு)

ஆயதீர்த்தத்தெண்டிசையினுமாதிரத்திபர்
தோயந்தோய்ந்தனர்வலியுறீஇத்துலங்குறவெவ்வே
றாயமாபலன்சூழ்குநர்க்களிப்பனவாக
வேயதம்பெயரனையனவிரண்டிற்குமிசைத்தார். (கசா)

என்னுமப்பெருஞ்சிதளிவாவியொன்றும்
வன்னவெங்கனல்பருகினர்தீண்டினர்மனத்திற்
கன்னுகிற்பவர்படிந்தவர்கண்டவர்தம்பா
னன்னுபாவதூலத்தையெஞ்சாவகைநசிக்கும். (கஎ)

அன்னதீர்த்தத்தின்மகிமைதானளப்பரிதெவர்க்கும்
பின்னரோதுதுஞ்சிற்சிலவிரித்தெனப்பெருநீர்
முன்னருண்டமாமுனிவரன்முத்தமிழ்முழங்கு
நன்னர்மாமலயத்தமர்குருபரனவின்றான். (கஅ)

தீர்த்தவிசேடச்சருக்கம்

முற்றிற்று.

ஆ - திருவிருத்தம் - ௱எஎ.



## மூர்த்திவிசேடச்சருக்கம்.

பவகங்கைநீத்துரியபரமசுகம்பெறநினைவோர்படியுந்தெய்வச்
சிவகங்கைசிதளிமாதீர்த்தநலஞ்செப்பினமேற்சிறந்தநோன்மைத்
தவகங்கையூர்ந்திடுமாலயற்கரியபிரானிமவான்றன்பாலன்றுற்
பவகங்கையேற்றமுடிப்பரமனருட்குறிமகிமைபகர்வாமன்றே. (க)

அகண்டைகசுயம்பிரகாசப்பொருளாய்ச்சச்சிதானந்தமாகித்
திகழ்ந்துயிருக்குயிராயசிவமுலகுபுத்திமுத்திசேர்ந்துவாழ்வா

னகங்கொடுமாசிருட்டியாரம்பமதிற்கொண்டைதுன்றுமடவிதன்னி
லுகந்தொருபொன்னிதழியடியொளிமயமாயருட்குறியாயுதித்ததாங்
[கே.

அவ்விதழியடியின்மூலத்தருண்மூலலிங்கத்தன்றிரைவார்க்குச்
செவ்விதின்யாம்பூசித்தசிவக்குறியொன்றுமீசதிசையின்மேவுந்
தெய்வவருட்குறியொன்றாயிலையுறுமத்தளிப்புறம்பிற்றிகழுஞானப்
பௌவநிகர்சீதளியின்பச்சிமத்திற்குறியொன்றாய்ப்படர்ந்துமேலும். ()

உலகிருநான்கினிலெண்கோடொப்பவருட்குறியெட்டாயுலகம்யாவு,மி
லகுமொராவிடைப்பூத்தவெழில்வல்லிபடர்ந்தேதறவிளையத்திட்டிக்கை
குலவமுகிழ்த்தறிவுநாளரும்பாகச்செயல்பூத்தெங்குறைவைக்காய்த்து,
நிலவுமருள்பழுத்துலகமெவைக்குமொருகற்பகமாய்நிற்குமாதோ. (௪)

இப்பரமன்றிருநாமம்பிரமதேசப்பிரியனையுரீசன்
செப்பரியகௌரீசன்பிருகுபூசிதனமலசீதளீசன்
வைப்பெனலாந்திருத்தலமாநகரீசன்பராபரன்மால்வணங்குநாதன்
றுப்பிதழ்வாய்வசுந்தராபூசிதன்முற்பெருமையுறுமூன்புரீசான்றும். (௫)

சிவமறையோனுகேசனென்றுரைப்பநால்வேதத்துஞ்செப்பமேலாக
முவமனிலாத்திருநாமமுடையநாயகன்றனக்கின்றோதுநாமஞ்
செவிபுகுதப்பெறுமவர்தந்திருவாயாற்செப்புமவர்சிந்தைசெய்வோ
ரெவரவர்கண்மூன்றுலகுக்கிறையாகிப்பிறவாதவின்பஞ்சேர்வார். (௬)

எண்ணரியதிருநாமஞ்சீதளியாற்குள்ளனமற்றிசைத்தலென்றே
னெண்ணுவதன்றதுநிற்கவெம்பெருமான்கௌரிகடாவிற்றலாமேல [க்
புண்ணியசைவத்தலங்களெவற்றுநவைபுரிமேன்மைபொருந்தல்போன்மு
கண்ணுடையானருட்குறிகளெவற்றினுமிக்குறியதிகங்காட்சியிக்கீர்.

அப்பரனையப்பதியிலருச்சித்தோரம்பிகைமாலவணியாது
செப்பரியசேந்தனைறைச்செங்கமலத்திருமாலனைன்டிசைக்குநாதர்
குப்புகழ்ச்சிகொளும்பிருகுகுசகேசன்குலமறையோர்குழுமுவாரோர்
வைப்புறுயான்வைரவன்முன்வருசேனமாகனைமுன்வரம்பிலோரால்.

வேறு.

இத்தனிப்பெருமான்றன்னைப்பூசித்தோரிறைஞ்சினின்று
பத்தியிற்கனிந்துமுன்னர்ப்பரவுநர்யாவரோனு
புத்திமுன்னுகர்ந்திட்டிச்சைபோகமேற்போகவிற்றின்
முத்தியின்புற்றுவாழ்வர்திண்ணமேமுனிவிர்காணோ. (௯)

காலையிற்சீதளீசன்கழலிணைவணங்கப்பெற்றோர்
மேலைநான்மறைளோதுமறமெலாமினிதுமேவிச்
சாலுமாதரவின்வாழ்வர்நண்பகற்சார்ந்துபோற்றுஞ்
சீலரொப்பொருளுமேன்மேற்செறிந்தினிதிருப்பர் (௧௦)

மாலையிற்றிருத்தலத்தெம்வரதனைவணங்கப்பெற்றோர்
பாலுறுமின்பமுற்றும்பருகுவரருத்தயாம
வேலையிற்பணியுமேலோர்விமலனுண்மலரடிக்கீ
ழேலுறவமர்ந்துவாழ்பேரின்பமுற்றிருப்பர்மாதோ. (௧௧)

ஈதளிநாதன்கோயில்சென்றுமுன்பணிந்துநின்றோங்
கேதமிறுதிகள்பல்வேறிசைக்குநமொய்தும்போற்றி
லாதிதன்மலர்வாய்ப்போந்தவாரணமன்பினோதுங்
காதலர்பத்துநூறுகதித்திடும்பலன்மேற்கொள்வார். (௧௨)

அம்மறைநான்கினுள்ளுமதிகமாமெசுர்வேதத்தைச்
செம்மைகொண்மனத்தராகிச்செப்புநரயுதஞ்சேர்வர்
பொய்ம்மையிலதனினுப்பட்பொருந்துநற்காண்டமோதுங்
தன்மையர்சரதநூறாயிரமடங்கதிகஞ்சார்வார். (௧௩)

அருத்திகொளன்னகாண்டத்தரற்குறுவணக்கம்வாய்ந்த
வுருத்திரமன்பினோதுமுவரொருகோடிசேர்வர்
கருத்துறுமறைகளென்னுங்கன்னலிற்கோதுநீத்த
திருத்தகுமருளேயாகுந்திராவிடவேதமோதும். (௧௪)

தொழுதகுமன்பர்பேற்றைச்சொல்லுதற்கியானுமாற்றேன்
முழுதுணர்பரமன்றானுமொழிவனேலளவின்றென்பான்
கெழுதகுமுனிவர்கேண்மின்கிடைத்துமுன்வணங்குமென்னு
வழிவரத்தொடங்குவாரும்வந்தடிபணிந்தாரொப்பார். (௧௫)

இன்னனபுரிவார்க்கெந்தையிங்ஙனமருளல்சொற்றாம்
பொன்னமர்தலத்தெம்மீசன்பூசோபகரணமாய
பன்னுறுதூபதீயபாசனமணியிழைத்த
மின்னுபொற்குடங்களாட்டும்வியன்மணிக்கலசமேலும். (௧௬)

இன்னிசைக்கண்டையாதியியம்பலவெழிற்பொன்னுடை
வின்னிசைக்கலங்கள்சொன்னவில்வமாலிகைமுத்தாரங்
கொன்னுறுமணிசெய்கண்டிகோளகைகுண்டலங்க
ணன்னர்மெய்க்கவசந்திண்காழ்நறுங்குறடுரிஞ்சுதேய்வை. (௧௭)

ஆதியவளிக்குமன்பரலர்பலதொடுத்தலங்கல்
போதுதோறமையச்சாத்தல்புலரியிலெழுந்துமூழ்கிச்
சோதனிப்பணிமெழுக்குச்சுடர்விளக்கிடங்கடோறு
மேதகவிடுதனந்தவனமமைவிதியாற்செய்தல். (௧௮)

இவைமுதற்புரியுமன்பர்திருத்தலத்திறைவன்கோயி
னவமுறக்கிலங்கள்போக்கிநவமணிசாதகும்பங்

இவள்சுவைதயிட்டிடைகம்முற்பொருள்கொடுஇருந்தச்செய்து
நவபுரிநாமமேன்மேல்விளங்குறநலஞ்செய்மேமேலோர். (௧௯)

எஞ்சலில்பொருள்களாட்டற்கியைவனவன்பினிந்து
மஞ்சனம்புரிவிப்போர்கண்மௌவன்மென்றுகையின்வாள்மை
யஞ்சுவையோதனம்பற்பலவகையபூபவர்க்கம்
விஞ்சுறநிவேதிப்போர்கணறும்புகையிரவச்செய்வோர். (௨௦)

இயம்பலவியக்குவிப்போரிரும்பொருண்மணியாற்செய்த
நயந்தருதிருத்தேர்மீதுநல்விழாநடத்துவிப்போர்
வியந்துரையிவர்முன்னுயமெய்த்தொண்டர்க்கெந்தையீயும்
பயன்றனையெம்மனோராற்பகர்தலெங்குணர்வானரிக்கின். (௨௧)

வேறு.

இந்தவருண்மூர்த்திநலமின்னுமனவில்லனவென்றியம்பருணம்
வந்தமுனிவரர்தலந்தீர்த்தம்மூர்த்திநலங்கேட்டுமகிழ்ச்சிகாமெந்தாய்
முந்துமைபேர்நடம்புகன்றுயவன்பொருட்டுக்கடம்புரிந்தான்முதல்வ
னென்றாலந்தரியான்டிக்குமுடியடிபணிக்கெக்கவினிலிவளாங்கமலமூர்
[த்தி.
எவ்விடைதந்தருளினுனெவ்வகையினுவப்பித்தானொன்னாரிந்தத்
திவ்வியமாதலம்புகுந்துதிருத்தருதன்போர்கடனெக்கெழிற்றிட்டான்
பௌவமுழுதுண்டமரர்பயந்தீர்த்தபெருமானேயமையமென்ன
வெவ்வமின்மாதவமுனிவீர்கேண்மினெனவான்றுமையாலியம்பலுற்று
[ன்.

மூர்த்திவிசேடச்சருக்கமுற்றிற்று.

ஆ. திருவிருத்தம் - ௪௦௦.



## திருக்கைலாயச்சருக்கம்.

---

சிலையமாதவநிமிர்ந்தொளிர்செம்பொனன்மேருச்
சிலையமாதவன்விழியெனக்கொண்டவன்றிருமுன்
மலையமாதவன்றனைவினவிடமிதென்றுயர்வான்
மலையமாதவன்கைலையின்சிறப்புரைவழங்கும். (௧)

திருத்தனுயகனுதியதேவரொம்முளத்தைத்
திருத்தனுயகனிரங்கெனச்சேர்ந்துநின்றேத்தும்
திருத்தனுயகன்மலரயன்றேடருமுடிசேர்
திருத்தனுயகனிருப்பதுதிருக்கைலாயம். (௨)

சிந்துமாதவனுமெனுற்கீரற்குத்தியிரஞ்
சிந்துமாதவன்போலியறேற்றுவித்துளங்க
சிந்துமாதவன்ஞானவாக்கருள்செயுங்கருணைக்
சிந்துமாதவனிருப்பதுதிருக்கைலாயம். (௩)

சித்தரங்கமாறுணர்ந்தருமறைமுதற்றேர்ந்த
சித்தரங்கமாலகன்முனிவரர்துதிசெயுங்காட்
சித்தரங்கமார்முடியரனுயிர்க்கருள்செயற்கிச்
சித்தரங்கமானிருப்பதுதிருக்கைலாயம். (௪)

சிகரமாயிரஞ்சூழ்கனசிமயமுன்யாவுஞ்
சிகரமாயினுமால்பதமாதிசித்திடினுஞ்
சிகரமாயிருங்கங்கையெம்பிரானருட்செயலாற்
சிகரமாயிருந்தொளிர்வதுதிருக்கைலாயம். (௫)

தஞ்சுகந்தரம்புடவியின்வாழுயிர்தமக்கே
யஞ்சுகந்தரவிடத்தருண்மாதெனவமர
நஞ்சுகந்தரம்வைத்தருள்சீகண்டனருதோற்
கஞ்சுகந்தரனிருப்பதுகைலையஞ்சைலம். (௬)

நாவலம்பதிநம்பிமாலாதியர்நணுகி
மேவலம்பதிவுறற்றிவெள்ளிபத்துறவேண்ட
பாவலம்பதிகத்திறற்பணிந்துசெல்பாற்றாற்
காவலம்பதிகங்கையன்கைலையஞ்சைலம். (௭)

மீதலங்கணன்கணிசெயவெழுதவின்விளைவுற்
றீதலங்கணவயறிகழ்*மகோதையெம்பெருமா
னோதலங்கணவுலாத்தமிழ்ஞானநூல்கேட்டுக்
காதலங்கணனிருப்பதுகைலையஞ்சைலம். (௮)

சுதியளித்தனவிதழியந்தொடையரன்ஞான
நிதியளித்தனதருட்கையினன்பர்க்குமிகழ்தற்
பதியளித்தனமனமகிழ்வுறத்தரீஇப்பரம
கதியளித்தனனிருப்பதுகைலையஞ்சைலம். (௯)

அனகனம்பரனிருத்தனம்மேயெனவழைப்ப
வினகனம்பரனவனையப்பாவெனவிளித்தா
டனகனம்பரற்றொழுத்தலையாற்செலுந்தகைத்தாற்
கனகனம்பரமாறொழுங்கைலையஞ்சைலம். (௧௦)

என்னையாளுடைநாவரசின்றுலகுய்வான்
மன்னிமேல்வரக்கருதியேதன்னைமற்றவர்க்கு

---

* மகோதை - சேரர்நகரம்.

முன்னையாற்றினிற்காட்டியுள்விழைந்தவாமுடிக்குந்
தன்னைநாமமப்பதிக்கருடகையதச்சைலம். (௧௧)

கரியகண்டனதாணையாற்கடிநுவக்கழைத்துப்
*பெரியதேவருட்கொடுபுகுஞ்சேரலர்பிரான்சொ
லரியநான்மறையாகமத்துணிபொருளமைந்த
திருவுலாத்தமிழ்மணநணியுலாவுமச்சிலம்பு. (௧௨)

பரவைகேள்வர்சென்னெறியின்முற்பகர்ந்தருள்பதிகச்
சுருதியாங்கணும்பண்முறைதுதிக்குநரிசைகேட்
டரவமாதியுமசலமாய்த்தன்மயமாகி
விரவுதன்குணமடுத்துறவிளங்குமவ்விலங்கல். (௧௩)

சிறிதுபாணித்தமாலையுங்கரியவனெனச்செய்
திறுதியாற்றமுன்னடர்விடத்தினையெதிர்காத்திட்
குறுகியேற்றருணம்பிரானெனமுதற்கொடுசொன்
மறையின்வாய்மைநற்பதிகமொன்றுடையதம்மலையே. (௧௪)

கச்சிநோற்றமர்மாற்கருளுரைத்தவாகருத்தி
னிச்சையாற்சிவரூபமீந்தவ்வுலகேற்றுஞ்
செச்சைமாலைவேள்கௌணியர்சிகாமணிசெப்பும்
விச்சைவேதவாய்ப்பதிகமூன்றுடையதவ்வெற்பு. (௧௫)

இருந்தவாறடிப்பெருவிரல்சிறிதிறையூன்ற
முரிந்தராவணற்குய்வழிமொழிவியசத்தாற்
றிரிந்தமாநிலந்திருந்தவுட்கொண்டுறைசெழுத்த
வருந்தகைக்கொள்சொல்வேந்தர்முப்பதிகமவ்வரைக்கே. (௧௬)

புடவியாங்கணுமுளசிவதலமெலாம்புகுந்தா
ளுடையபிள்ளையுநம்மையாளரசுமுன்றுரைத்த
திடமுறுந்தமிழ்மறைப்பதிகம்மெலாந்திகழுந்
தொடருமன்பொடுபோற்றுசீர்படைத்ததச்சுரும்பு. (௧௭)

வேறு.

ஆயிரவிரட்டியானமருப்பயிராவணைத்தந்
நாயகமாக்கொண்டென்றுநண்ணுவெள்ளியம்பல்கோடி.
பாயவச்சிகரியாண்டும்படர்ந்தணபிடைந்தழுவு
தூயமெய்க்குடிலையேயத்தோவிணமாவமாதோ. [௧௮]

வெள்ளியகரியசெய்யவிழைதருபசியபொன்மை
கொள்ளியனிறத்தவின்னகோடரமனப்பில்கோடி.
யெள்ளியலகன்றசீர்த்தியிறும்பதனிடங்களொங்கும்
வள்ளியன்மறைகளேயவ்வடிவமாய்வதிவவாங்கண். (௧௯)

---

* பெரியதேவர் - திருநந்திதேவர்.

ஆடகச்சில்விசேர்ந்தவயிரவச்சினங்களார்ந்த
கோடகநிரைகள்பூண்டகொடுஞ்சிபன்மணியின்மாண்ட
பீடகவிடைப்பதாகைபிறங்குசந்தனம்பல்கோடி
சூடகமுன்கைபாகன்றொல்வரையதன்பாற்சூழும். (௨௦)

பதம்பலவொன்றேயாகப்படைத்தவர்பாணிசென்னி
விதம்பலராரிணமென்குவியாக்கிரமறுகுபூட்கை
கதம்படுமரிமுன்போகில்கவிநாராதியாமற்
புதம்படுமுகத்தராகிப்பூமகன்முகுந்தனாதி. (௨௧)

தேவர்களாற்றன்முற்றுஞ்சிந்திடுந்தகையரன்றேர்
மேவுறுபதங்கண்மாற்றவிதிக்கவோரொருவர்வல்லா
ராவயிற்சூழ்வர்யாண்டும்பூதர்களனந்தகோடி
யோவிலப்பூதநாதருவகையின்மிடைவர்பல்லோர். (௨௨)

கருமமெய்முனிவர்மாதர்கருவமுற்றகற்றுவான்கொ
ளாறுருநோக்கிமால்கொண்டிணைவிழைச்சமர்ந்தமாற்குத்
தருகுதும்பின்றென்றுசாற்றியாங்கவன்பாற்றந்த
வரனுறுமையன்மேவிவாழ்பதமாங்கோர்பாங்கர். (௨௩)

பயன்மிகுவடுகன்வீரபத்திரனாதியோர்தம்
வயமிகுபரிவாரங்கண்மருங்குநின்றேவலாற்ற
வியனரசிருந்துவாழும்விரிமணிமாடமேய
நயன்மலிபதங்களோங்குநவிரமற்றதன்கணோர்பால். (௨௪)

கிரிசையினமிசமாகக்கிளர்ந்தெழுமனந்தகோடி
வரிசைகொள்சத்திமார்கண்மருவிவாழிடங்கள்பல்ல
வரியயன்வலாரியாதியமரர்களமரவாங்கண்
விரிதருமிடங்கள்பல்லவிளங்குமப்பறம்பின்மேவும். (௨௫)

இயவுளர்பதினெண்பாலார்யாவருமீண்டியென்றும்
வியலிடந்தோறுஞ்சூழ்வர்வேட்டனயாவுநல்கும்
பயன்மலிகாமதேனுப்பற்பலகோடித்தஞ்
சயமிகுவிடைகளோடுதழீஇக்கொடுவதிவவாங்கே. (௨௬)

கற்பகம்பாரிசாதங்கவின்கொள்சந்தானமிக்க
பொற்புறுமந்தாரந்தான்புகலரிசந்தனப்பேர்
விற்பயில்விருக்கமொவ்வொன்றனந்தமாய்விரிந்துபூத்தவ்
வெற்பில்வந்திரப்பாரின்றிவிளங்குவவளவிலாத. (௨௭)

வரையதன்பாங்குசிந்தாமணிக்குவாலளப்பிலாத
மனைநிதியளப்பிலாதவனிதியளப்பிலாத

புரையறுபதுமராகப்புதுமணிமுதலவொண்பா
னிரைமணிபரல்களாவத்தலமெலாநிலவுமன்றே. (௨௮)

சாதகும்பத்தினாலுந்தயங்குபன்மணிகளாலு
மேதமில்வேர்பராரையிணர்தளிர்முகையலர்ந்த
போதுகாய்கனிகளாதிபுணர்ந்துளதருவெலாக
மீதிகழ்வல்லியோடும்விரிபொழிலாகிமேவும். (௨௯)

வகுளமாவருக்கைகோளிவஞ்சிபுன்னைகன்னிகாரங்
கருபமாண்செருந்திசந்துகணிகுரால்பாடலந்தேங்
ககருநாரங்கஞாழலசோகுசண்பகந்தமாலம்
புகலுமின்னவைமுன்னானபொழில்கண்மேற்பொழிலைக்கும். (௩௦)

அகனிலம்பளிங்கரண்பொன்னான்மரகதச்சோபானந்
தருமரதனத்தாற்சந்துபதிந்துயோசனைவிரிந்து
வகையபன்மலர்கள்பூத்துவயங்குறுமனேகமேன்மை
புகலருமமரிதன்னாற்பூரிதமாகிமன்றே. [௩௧]

மாலதிசாதிமௌவன்மயிலைமுற்கொடிகடாங்கெச்
சாலதிசுகந்தம்வீசுதண்பொழில்கதிர்கண்மாய்க்கும்
பாலதிவ்வசலமேனும்பரந்தசெம்மணியுந்தானு
மேலதிண்கதிர்விளைத்தவ்விருசுடரின் [illegible] (௩௨)

பூத்தருதாதினாற்பொன்மலையினைப்பொழிகருவி
னீத்தவர்தானைபோர்த்தநிலையினைப்படுமாக
மாத்தகுமொளியாற்பானுவந்துபோமலையமானுஞ்
சோத்தமாலயன்செய்தாங்கட்டுருமத்தினையில்லைப்பு. (௩௩)

புறம்புசூழ்ந்திடுமெண்டத்தும்புதியபல்சுகந்தம்வீசத்
திறம்புரிந்துரியகாலச்செய்தியானன்றியென்று
மறம்புரிவாரினாராமம்பலனளிக்குமந்தப்
பறம்புசூழ்நெறிவிளங்காபண்ணவர்தமக்குமன்றே. (௩௪)

பத்தியினடிசூழ்வானோர்பார்த்திபருவியோட்ட
மத்தலைநின்றதென்னென்றதிசயமுறவெள்ளிக்
குத்திரம்வேள்விவீதிகோத்திரத்தருவியோடி
மெத்தியவெப்பமாறவீழ்தலொழியுமாங்கே. (௩௫)

கோத்திரமதிற்சுவேதகுஞ்சரமுதலாவி
சேத்திரளமருங்காமதேனுவெண்மாடமாதி
காத்திரவிடயமாயபரிசத்தாற்காண்டதன்சா
னேத்திரவிடயமாகப்பிரித்துமேர்காணுனைதாம். (௩௬)

முனிவர்பூவெடுப்பவெட்டாவிடபத்தைமுரண்மால்யானை
யினிதுகைநீட்டித்தாழ்த்தாங்கெடுத்தபின்விடுத்துச்செங்கே
னனிமறைமலர்ப்பூமாரிநல்குமாவர்த்தயிக்க
புனிதசங்காரித்தங்கள்பொருதொன்றிற்பொழிதல்போல. (௩௭)

மாதவருடைசந்தோறும்வாநிச்சாங்கந்தானே
சோதனியுபாங்கமாகச்சூழ்ந்தவைகறைமுற்காலத்
தாதராமுறைநப்பநாருமலிடும்பணிமேற்கொள்வ
பூதராமதனில்யான்மெய்ப்புல்லினமனப்பிலாத. (௩௮)

அலகிடுமிடங்கடோறுமலகிலாநிரந்தமங்கண்
வலனுறுகாமதேனுமயசலமதநனிவப்
பலமுசக்கிலைபூந்தாதிற்பன்னிறக்கோலஞ்செய்வ
குலகிரியருவிமொண்டுகுழுமிகண்முன்றில்வார்ப்ப. (௩௯)

கேசரியருவியாடிக்கெழுவுதஞ்செயமொடங்கு
மாசறுமுனிவர்பின்னல்வளருதிருளர்த்துலர்த்தற்
காசறுதங்கணீட்டியத்தொழில்புரிவவோர்க
டேசுறிவெயினுணக்குமருத்துவர்வெணமாதோ. (௪௰)

நளிர்சுதைதயேல்வைவீரதாலேயபுரையுமேனு
மொளிதிகழூவரியேய்க்குமுற்பலத்தொழுமெண்றூதி
னளிகள்செவ்வழிசெய்செம்மையம்புயமலரிறோர்காற்
களிமதுக்கடலேநெருங்கவிதுமைக்கைகலப்பாங்கர். (௪௧)

அமரிபூரிதவலந்தையயளப்பிலவீரவேலை
விமலன்பின்றனில்யார்க்குமனித்திடவினைழியிற்செய்த்தா
யமருநம்வரவுதாழ்க்குமண்மிப்பல்லுருவமாக
வெமையனித்தருளவாழ்துமென்றவணிருத்தலேய்க்கும். (௪௨)

மாடிபம்நடத்தவானைவாவிவான்கிழித்துக்கற்பஞ்
சாடிமாடங்கடாக்கிச்சலமலர்மணிபொன்வீழ்த்தல்
வாடிலாவர்த்தமேசம்வர்த்தசங்காரித்தங்கள்
பீடுறுபுட்கலாவர்த்தமதைமழைபெய்வமானும். (௪௩)

வேறு.

பூதிநிறைமெய்யர்விழிப்புனல்பெருகவிருந்தசையா
தோதியர்சோற்றின்றூர்க்கண்டுறுபகலின்மதிக்கிலைதான்
சீதளநீர்பொழிதலென்கொல்செப்புகெனக்கிலம்பிதன்மெய்ச்
சோதியினென்றிகறதருவார்துணிபுணராவாதிகள்போல். (௪௪)

வேறு.

சரியையேமுதலமூன்றாந்தலித்துனிபுவியிற்றூங்கி
யரியநற்சாலோகாதிபதந்தொறுமமர்ந்துவாழும்

பெரியர்தந்நெறியின்மேன்மேற்பிறங்குமவ்வந்தெளிக்க
ணூரிய நூன்மரபினின்றுங்குவலையிற்பொலிந்துவாழ்வோர். (எரு)

மறைபராயணர்களோர்பால்வாக்கியர்களுமோர்பா
னிறைபொருள்விரிப்போர்பாலேயிதிகாசபுராணர்பா
லறைபொருள்சிவனேயென்றுணர்வையாலவிளம்புவோர்பாற்
பொறையருளடக்கம்வாய்மைமெய்புனிதமாதவர்கள்பல்லோர். (எசு)

ஆகமமிருபானெட்டுமையமுன்றுயவுணர்வோர்
போகமுற்றுணர்ந்துதம்பாற்போந்தவர்பாசசத்தி
யேகுறப்பசுத்துவத்தையிரித்தருட்சிவமேதாமே
யாகவைத்தருளும்போதகாரியர்மடங்கள்பல்ல. (எஎ)

வேறு.

முற்றுணர்பரமன்ருத்திரவடிவின்மொழிந்துவேதத்தையாகமத்தைத்
தெற்றெனவுணரும்பாடியவடிவிற்செய்தவவ்வியாசர்கோமேதுரை [கா
சொற்றநூல்களினம்மறைத்துணிபாய்த்துளங்கலைவளவன்செயாகமத்
விற்றெனத்தேர்ந்துதெளிகவென்றுலராப்பரிசைமுடிவெள்ளிதனவுணை [ர்க்கோர்.

வேறு.

இத்தகுங்கைலைப்புறத்தின்றுமென்னிலவா
மெய்த்தருத்திருவளனெலாம்விளம்புவாரெவரே
யத்தனிப்பொருப்பளவிற்சிருங்கங்களவற்றின்
மத்தியிற்றிருக்கோயிலின்வளந்தெரித்துரைப்பாம். [எகூ]

ஓதுதன்னகத்தமர்ந்தருணிறைபெயனவொழியா
வேதனண்டமுட்புறம்பெலாம்விரித்துகாதியதாய்க்
கோதிலாதபல்வகைச்சிலையுலோகங்கள்கொடிகள்
மீதுமின்று*குஞ்சம்பலவிளங்குவதாம். [அ0]

நீடுவெள்ளொளியாங்கதுநிறைக்குமக்கைலை
நாடுமேலவர்காட்சிக்குவிடயமாய்நாற்பான்
கோடியோசனையுந்தன்குலவைதற்பாதி
யாடுயோசனையகற்சிபெற்றுடையதப்பொருப்பில். [அக]

பாங்கராயிரகோடிமாசிருங்கங்கள்பரம்பி
யோங்கநாப்பணிற்†கருணிகாகாரமாயுமை
ணீங்கிலையிருகோடியோசனையுளதிர்ச்சி
தாங்கியத்துணையகன்றொருசிருங்கமன்றமர்ந்தும். [அஉ]

ஆயதோர்சிகரத்தினதடிகளாய்முடிகள்
மேயவான்சிகரம்பலவைத்தடிமேவிப்

---

* குஞ்சம் - எண்டுமுனிவர்வாசஸ்தானமென்னும்பொருட்டு.
† கருணிகை - தாமரைப்பொருட்டு.

பாயசெண்முடிகுழுறப்படர்வனவனேகஞ்
சேயவாங்கவற்றடிமுடிசெறிவனவனேகம். (௫௩)

அன்னவற்றடிசூழ்வனவவற்றடிசூழ்வ
வென்னவிவ்வகையோரொர்சூழ்நிரைமுடியவையும்
பன்னுமென்முடியளவினிற்பதின்மடங்கதிகந்
துன்னிநின்றதீழ்க்கீழ்விரிதொகையினவாம். (௫௪)

செகரம்யாவையுங்கனிதருதற்றேர்ச்சியிற்சிறந்தோர்
புகலுமாபெருந்தொகையினுமடங்கிடாபுள்ளநர்
தகையவானவிருவரித்தொகையெனத்தாங்கள்
பகரவெண்ணின்மால்பிரமன்பேர்ப்பொருள்பிறபரிப்பார். (௫௫)

அலகில்கோடிமாசிகரங்களென்னவேயமைந்து
நிலவுமாங்கவையொவ்வொருசூழ்நிரையினமொத்
திலகுமாடகமிரசிதமினைன்சிலைகள்
குலவுமீன்மணிமரகதங்கொழுங்கதிர்வயிரம். (௫௬)

படிகமாதியவடிவமாய்ப்பகிரண்டத்திருளுங்
கடியுமின்னவையாவினுமுயர்ந்துமுன்கழறு
முடியினின்றதோர்முடித்திறன்யாவரோமொழிவார்
வடிவிருலதுமாணிக்கமயத்ததாய்வயங்கும். (௫௭)

இந்தமாமுடிமேலதாயிலங்குறுப்பெவர்க்குஞ்
சிந்தையாலுநின்றளப்பரிதாய்நெடுஞ்சேண்போ
யுந்துகாஞ்சனமாமதிலொளிர்மணிக்கொடுங்கைப்
பந்தியோடுமச்சிகரத்திற்சூழ்ந்தொளிபரப்பும். (௫௮)

இருங்கவின்கொளுமன்னதனுச்சியினிலங்கி
விரிந்துகோடியோசனைத்தனைவியனிடத்ததாகி
வரங்கொள்கோடிமாமேருவின்வயங்குகோபுரங்கள்
பிருந்தமோடுறுவாயில்கள்பிறங்குவதாகி. (௫௯)

அணியுறுத்தியபஞ்சரத்தினங்களாலமைந்த
தினியவாவரணங்களாந்திலங்குறுசீர்த்தாய்
மணிகொளேமகல்லாரமல்கேமவான்றடங்க
ளிணையிலேமமெய்யானமுன்னிலங்குவதாகி. (௬0)

கருதுதாங்கடாக்கனித்தனிவாழ்பதங்களிரு
யிரமடங்குயர்வளத்தவாயிமாசலையெழிற்குஞ்
சரமுகன்குகன்மாலயனரிமுனோர்சதத
மருவிவாழ்வுறுபதங்கண்மன்வயங்குவதாகி. (௬௧)

கோலமேருவையொத்தவர்குடிலமாமுடியோர்
சூலடங்கதண்டங்கரம்பரித்தவர்துலங்கு
நீலகண்டத்தர்காளகண்டத்தினர்நிலவும்
பாலநேத்திரராலவாய்நாகவாபரணர். (௬௨)

வேறு.

ஆயபல்பூதநாதரளவிலர்சூழ்வதாகி
மேயமாவலங்காரங்களெனைத்துமார்ந்துலகமெல்லாம்
வாயவற்புதங்கொண்மேனியருத்திரகணிகைமாதர்
மேயபல்குமரங்கள்சூழும்விளக்கமிக்குடையதாகி. (௬௩)

ஆன்றவரகத்துளொன்றுமமர்ந்துவீற்றிருப்பதாகிச்
சான்றவர்துதிசாருபந்தாங்குருத்திரர்பல்கோடி
தோன்றல்கள்சூழ்வதாகிச்சொல்லிறும்விமானமெங்கு
மேன்றுசெல்விமானகோடியெங்கணுஞ்செறிவதாகி. (௬௪)

இளருமிந்திரமாநிலை*விருதசோபானத்தாலுந்
தெளியொளிமணிகளாற்றித்திருக்குட்டிமங்களாலுந்
தளர்வில்பல்வயிரத்தம்பத்†தத்தகாஞ்சனத்தபித்தி
யொளிசெயுமிந்துகாந்தத்துலப்பிலாவிடங்கத்தாலும். (௬௫)

சவிதிகழ்பதுமராகச்சாளரவரிசையாலு
மிவைமுதலளவிலாமலிலங்குறுப்பினங்களாலுந்
தவலறத்திகழ்வதாகித்தாமத்தனங்களாதி
திவியமாவியம்படுக்கும்பல்கணஞ்செறிவதாகி. (௬௬)

வளையறுமணிவித்தாரமண்டபஞ்செறிவதாகி
யுளைசெய்தம்மதிகாரங்களொழித்தவரளவிலாத
வரிபிரமேந்திராதியமரர்சாயுச்சியத்திற்
புரிவொடுசென்றசாமீபம்பூற்றிப்பொலிவதாகி. (௬௭)

தந்தொழிலொழிக்கச்சியாவுஞ்சாற்றியவாங்குச்சார்ந்த
விந்திரனயன்மாலாதியிமையவர்முனிவரேனோர்
வந்துசாமீபத்தெய்தியுட்புகவனைத்தேயத்து
நந்திமண்டபமுன்மேவிநலம்பெறத்திகழ்வதாகி. (௬௮)

ஆயிரகோடிசோமருக்கரோடங்கியொன்றாய்
மேயினவென்னயான்மெய்விமலமேதகவுடையதாகி

---

* விருதம் - முற்றெச்சம்.

† தத்த - தப்தவென்னும்வடமொழித்தற்பவமாமென்பிடம்வைக்கப்பட்டவென்னும்பொருடரும்பெயரெச்சம்.

வாயிகமாகிமூன்றுக்கோசரவடிவமாகிச்
சேயவெண்ணறிவுக்கெட்டாவளம்பலசெறிவதாகி. (௬௯)

செழுந்திருச்செம்பொற்கோயிலொன்றுசேர்ந்திலங்குமாங்கே
யழுந்துறுமிடரினீங்கியாருயிர்யாவுமின்பத்
தழுந்திவைத்துவப்பேறெய்தச்சகளமாயகளமாகி
யொழிந்திடாதியாண்டும்வேறற்றுறைபொருளொன்றதானே. (௭௰)

திருவருளுருற்பாலசந்திரன்றிரைசெய்கங்கை
மருவுறுமிதழிவேணிமாணிக்கமகுடமாண்பும்
பொருவருந்தூவெண்ணீற்றுப்புண்டரநுதல்வனப்பு
மரிநிலவனன்மூக்கண்ணுமராக்குழையணிந்தகாதும். (௭௧)

அருமறையாகமங்களாதிமெய்ந்நூல்கணந்தி
திரிபுரைக்குடகேசிக்குளிர்நிறைதிகழ்செவ்வாயு
மரியுருவெண்மைமாற்றிக்கருமையன்றளித்தவாலம்
விரவுறுகளனுநாகபூடணம்விளங்குமார்பும். (௭௨)

ஒருதிருமுகனுநான்குபுயங்களுமொழியாதென்றும்
விரிதருகருணைநோக்குமேருவினருவிமானு
முரணமர்மருமுந்நூலுமுழைமழுவபயமொட்பில்
வரதமென்கரனும்யாத்ததிருவரைச்சருமமாண்பும். (௭௩)

இருவினையொப்புவாய்ந்துமலபரிபாகமேய்ந்து
திருவருள்பதியப்பெற்றுச்சிவத்துவவிளக்கமுற்று
மருவினர்மருவிநின்றார்மருவுவாராயவெல்லில்
பெரியவர்க்குலகநோடிபிறங்கியநகரியாகி. (௭௪)

உறைதருமனைகளாகியுலாவருவீதியாகி
நிறைமலர்த்தடங்களாகிநின்மலர்ப்பொழில்களாகிக்
குறைவிலாயாணமாகிக்கோதிலாப்பரிகையாகி
மறைமுழங்கரசுமேவுந்தாணிமண்டபங்களாகி. (௭௫)

சித்திரமணிமன்றாகிச்செய்மணியணிகுன்றாகி
நித்தியநிதிகளாகிநிரந்தபண்ணதிகளாகி
யத்தருபெரியர்யாருந்தனித்தனியமர்ந்திட்டாங்கே
சுத்தவத்துவிதானந்தந்தோய்வுறவிரிந்தவாகி. (௭௬)

## வேறு.

அரவணையான்சிந்தித்தேலிடுவவாகியருமறையான்சென்னிதனக்கணி
யவாகிச், சரவணத்தான்கைதொழுதுசார்வவாகிச்சார்ந்தார்கடமக்கெல்
லாஞ்சரணமாகிப், பரவுவார்பாவங்கள்பறைப்பவாகிப்பதினெட்டுக்கண

அராதனைபீடத் தும்பராருயிர்க்கின்பமேவ
விரிதருவிரிசடைசெய்துயிற்றிருந்தருளுமென்று
வரையிருமலையத்தெம்மான் வழங்கினனிமயத்தன்னை
பரனெதிர்ப்பணிவிருவம்பரிசினைப்பகரலுற்றான். (௮௫)

திருக்கைலாயச்சருக்கம்

முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௮௫.



## கௌரிதாண்டவச்சருக்கம்.

எம்மையாளுடையகோன்வீற்றிருந்தருள்கைலைமேன்மை
பொய்ம்மைதீர்தவத்தீர்முற்றும்புகல்வதெற்கியலுமோமே
வம்மையன்னலைவிருவிகைபுரியடைந்துநோக்கச்
செம்மையஞ்சடிலத்தெம்மான்செய்நடச்சிறப்புச்சொல்வாம். (௧)

அத்திருக்கைலைதன்னிலண்ணறன்னிடப்பான்மேவுஞ்
சத்தியெம்மன்னையோர்காற்றனித்தெழுந்திறைஞ்சிநின்று
புத்திமுத்திகளையன்பாற்போற்றிவேண்டுநர்தமக்கு
நித்தியமுதல்வனேரியமெய்யொணிமலமூர்த்தி. (௨)

விண்ணகமேலான்வேதன்றன்னகம்வீட்டுமேலாய்
பண்ணகவராசமங்கைச்சொன்னகங்கணம்பரித்தோய்
பின்னகம்மதிகொள்வேணியின்னகமிதழிவேய்ந்தோ
யென்னகட்போலவிந்தமன்னகத்திருந்துவாழ்வோய். (௩)

ஆரணமுதல்வபோற்றிநாரணற்கரியாய்போற்றி
வாரணமுரித்தாய்போற்றிமாரணசூலிபோற்றி
பாரணகாளபோற்றிகாரணபரமபோற்றி
பூரணபுனிதபோற்றிதாரணபுயங்கபோற்றி. (௪)

என்னநின்றேத்தியன்னையிறைவினையடனம்பல்வே
றுன்னுறாவியலவென்றாயவற்றியலிடந்தேர்கில்லேன்
பொன்னணியன்மன்றின்முன்னீபுரிநடம்புரிந்துநோக்கி
நின்னருளொருவுறாதுநின்றுளமுவகைகூர்ந்தேன். (௫)

கமலத்தினறுந்தேன்மாந்திக்கடிமலர்பின்னுந்தேடும்
பமரத்தினின்னடத்தின்பாலுளம்விரும்புமேலுந்
தமலத்தர்க்கறிவொணாதோய்தாண்டவபேதமின்ன
நிமலத்தகலங்களின்னவென்றிவைநிகழ்த்துகென்றாள். (௬)

இளந்தசொல்வினவியெம்மான்கிரிசைகேளுலகம்யாவும்
வளந்தருநமதுகூத்தின்மயமெனவுணர்தியானி
னுளந்தவமகிழயாமுமொப்பிலாநடனந்தில்லைக்
களந்தனிற்புரிகாற்சாமகானநீயாங்குச்செய்தாய். (எ)

வேறு.

தயங்கியசாமகானத்தினின்றுஞ்சரிகமபதநியேழ்சுரங்கள்
வயங்குறுசட்சரிடபகாந்தாரமத்திமபஞ்சமமதன்மே
வியங்குதைவதமேநிடாதமென்பெயர்களியைந்துமாயூரமேயிடப
மயங்கிரவுஞ்சங்கோகிலந்துரக*மாம்பலவோசைபோன்முறையே. (அ)

ஒன்றன்பின்னொன்றாயொலித்தெழுந்தனவாலோதுமவ்வேழ்சுரங்களினு
னன்றுநம்மிடையேயெழுவிதநடனநலம்பெறத்தோன்றினநளிர்பூ
மன்றலங்குழலாயுலகுயிரோர்ந்துவழிபடஇயின்புறமதித்தே
யின்றுநீகேட்டியிவற்றெழுபெயருமிடங்களுமிசைக்குமென்றியம்பும். ()

மாதவர்பரவுமானந்தநடனம்வயங்குறுசந்தியாநடனங்
காதலிநின்பேர்க்கௌரிதாண்டவமேகவின்பெறுதிரிபுரநடன
மோதுமாகாளிதாண்டவமுனிதாண்டவமொடுமுலகசங்கார
மேதகுநடனமெனுமிவைசிவைநாம்விதந்தநன்னுமமென்றுணர்தி. (௧0)

வேறு

பிரமகற்பங்கடோறும்பேணுநர்பொருட்டாலிந்தத்
திருநடமேழுஞ்செய்துஞ்செப்புமத்தானங்கேண்மோ
வரவுமம்புலியும்போற்றுமருட்டில்லையம்பலத்திற்
பரவுமானந்ததாண்டவஞ்செய்வோம்பைம்பொற்பாவாய். (௧௧)

இவர்மணிமாடக்கூடலிரசிதசபையினின்று
தவரடிபரவச்செய்துஞ்சந்தியாதாண்டவத்தைப்
பவளமெல்லிதழிநின்பேர்ப்பரவுதாண்டவத்தையென்றுஞ்
சிவமிகுதிருத்தலத்திற்சிற்சபையதனிற்செய்வோம். (௧௨)

† அத்திரிகூடவெற்பென்றறைதிருக்குற்றாலத்திற்
சித்திரசபையிற்செய்வேந்திரிபுரதாண்டவத்தைக்
கத்திகைக்குழலியாலங்காட்டினிற்காளிதாண்ட
வத்தைநன்கியற்றுகிற்போமிரத்தினசபையின்மாதோ. (௧௩)

தாம்பிரசபையிற்றேவதாருமாவனநெல்வேலி
யாம்பிரபலத்திலாற்றுதுமுனிநிருத்தங்
காம்பிரங்குறுதோளீசங்காரதாண்டவத்தையாவுங்
கூம்பிரவதனினின்றுகுலவுறவியற்றுகிற்பேம். (௧௪)

---

* ஆம்பல - யானையின்றிரிசொல்ஆறனுருபுவிரிந்துநின்றது.
† அ - சுட்டு.

இவ்வியனடனமேழுமேந்திழாயியற்றிடங்கள்
செவ்விதினுரைத்தாமுன் றன்சிந்தையிலார்வமிக்க
தெவ்வியனடனமோதுகென்னவென்பேர்கடங்கா
ணவ்விழைவுற்றேனன்னை தலமெவணருள்கவென்றான். (கரு)

அன்னையாங்குரைப்பவெந்தையருள்செயுமமலநாமுன்
மன்னடம்புரியுமாலவாய்மதுராபுரிக்கு
முன்னுறுவடகீழ்பாலின் மூன்றரையோசனைத்தாய்ப்
பன்னுமெல்லையிலுண்டோர்பொற்பதமிகுமிதழிக்கானம். (கசு)

அவ்வனஞ்சகலதேவசேவிதமாகுமாங்கே
திவ்வியநமதுரூபசிவக்குறியனுதியாகி
யெவ்வமெவ்வுலகுநீங்கவிலங்குமொன்றதிலெஞ்ஞான்று
மைவ்விழியிமயமானேமன்னிவீற்றிருந்துவாழ்வோம். (கஎ)

என்றிவையருளினோதியெம்பிரானியம்புமேனு
நன்றிசெய்பிரணவார்த்தநாமெனவுணர்த்திநம்பா
நின்றொளிர்கொன்றையிற்போனிலங்களிற்றலங்கடம்மின்
வென்றிகொளித்தலத்தினமக்குளவிருப்புமேலாம். (கஅ)

மதிநுதற்பவளச்செவ்வாய்ம்தரரிக்கயற்கட்கோங்கின்
கதிர்மணியாரக்கொங்கைக்கனங்குழைக்கௌரிகேட்டி
விதியரிபுடவிநாகர்விபுதர்கள்பிருகுமுன்னோர்
சுதியளிமுரல்க்கானிற்சூழ்ந்தெமையருச்சிப்பாரால். (ககூ)

சகலகாமியங்களுக்குந்தவமொன்றேயேதுவாகும்
வகையுயிர்ப்பயிர்களோம்பவருசரியாதிக்காலிற்
றகையருணன்னீர்பாய்ச்சுந்தலைவிநீயாங்கட்பூசை
பகர்தவம்புரிதிநின்பேர்ப்பயினிடந்தெரித்துமென்றான். (உ0)

அத்தனன்மொழிவினவியன்னையுள்ளுவகைகூர்ந்தந்
நித்தனதருளின்மேன்மைநினைந்தவனடியிற்றாழ்ந்து
பத்தியினிறைஞ்சிநீங்காவிடைபெறீஇப்பரவுமக்கா
னத்துறமதித்தெழுந்தாளகிலமுநலம்பெற்றுய்வான். (உக)

பொன்னரிமாலையாதிபுதுமலர்த்தொடையலாதி
நன்னரினணிந்துசாம்பூநதத்*தடர்குயின்றதண்டிற்
றுன்னரிவயிரத்தாற்றித்துலங்குநித்திலமேல்வேய்ந்த
பன்னரிதாயசோதிப்பஃறொழில்விமானமாங்கே. (உஉ)

அமரரிற்சில்லோர்தாங்கி†யந்திகங்கொணுமுன்னிற்ப
வெமையளித்தருளுமன்னையிறைவனையகத்திற்றாங்கிப்

* அடர் - தகடு. † அந்திகம் - சமீபம்.

பமரமெல்லோதியார்ப்பப்பாதநூபுரங்களார்ப்ப
விமைகதிர்க்கலாபமார்ப்பவியம்பதினெட்டுமார்ப்ப. [௨௩]

மாதவர்முனிவர்போற்றமற்றவர்மகளிர்வாழ்த்த
வேதமில்விபுதர்யாரும்புட்கலாவர்த்தமெய்ப்பப்
போதரப்பொற்பூமாரிபொழிதரப்புவனம்வாழக்
காதலினதன்கணாரோகணித்துவீற்றிருந்தான்மன்னோ. [௨௪]

வாணிமகரன்பாற்பானுமண்டலத்திறைவன்போலத்
தானமர்ந்தருளருணிதரிசனத்துணர்த்துவான்போல்
மேனநித்திலவிமானம்வீற்றிருந்தருளுமன்னை
தேனலரலங்கல்வானோர்காவினர்செலச்செல்வாளால். [௨௫]

அன்னையாங்கெழுதன்முன்னரநிந்திதைகமலனிப்பேர்
மின்னனார்முன்னனேகசேடியர்விரவிச்சூழ்ந்தார்
சின்னமெக்காளந்தாளந்திமிலைசல்லரிதடாரி
யின்னியமுள்ளவெல்லாமியக்கினர்கணங்களெல்லாம். [௨௬]

பன்னிறக்கவிகைதாங்கிப்படர்குநர்பல்லோரம்பொற்
றுன்னுகாற்கவரிவீசிச்சூழ்குநர்பல்லோரங்கை
மன்னுகோடிகங்கடாங்கிவருகுநர்பல்லோர்தண்கான்
முன்னுறுசிவிறிவீசிமுடுகுநர்பல்லோர்சூழ்ந்தார். [௨௭]

துங்கநல்லிசைகள்பாடுஞ்சூதர்மாகதர்கள்பல்லோர்
மங்கலமெடுத்துப்பாடும்வந்தியர்பல்லோர்போந்தார்
வங்கியமுதலகோடவதிமுதற்கருவியேந்தி
யங்கிசையெழாவினின்பவாரிபெய்தனேகர்சூழ்ந்தார். [௨௮]

மேயநான்மறைகள்வீற்றுவீற்றுநின்றிசைப்பார்பல்லோர்
தூயவம்மறைகளாலேசுவத்தியோதுநர்கள்பல்லோர்
சேயதந்திரங்களோதுஞ்செம்பொருடிரட்டிநேர்நின்
றாயபன்னுதிகளாங்கேயன்பொடுபகர்வார்பல்லோர். [௨௯]

புயனிறக்கோகிலங்கபோதகமராளம்பூவை
பயின்மொழிப்பலாசனங்களாதியபறவைதத்த
மியல்பின்வாழ்பஞ்சரங்களேந்தியவ்விசையிசைப்பித்
தயில்விழியரம்பைமாதராளப்பிலரடுத்துச்சூழ்ந்தார். [௩௦]

திரிமருப்பரிணமோவாத்திறல்கெழுமேடமிக்க
கருமுசுவாதிதத்தங்கைக்கொள்பொற்றொடரினோடு
மருவுறக்கொண்டுசெல்லும்வானவரன்னமாக்க
டருதொழிலருமைகாட்டிச்சார்ந்தனராங்கட்பல்லோர். [௩௧]

வீரமேயுருக்கொண்டன்னவிசயையேசயையங்கையிற்
சேரமாவிடபமீதுதிகழ்தருபொற்கோருங்கி
நேரிருபாலுஞ்சூழுநெருக்கினையொதுக்கிச்செல்லத்
தாரணிமுழுதுமுய்வான்றண்ணருளுநோக்கச்சென்றாள். (௫௨)

இத்தகையோடுசெல்லுமெம்பெருமாட்டியாங்குச்
சித்தமீதன்புகூரச்சீறடிபணிந்துபோற்று
நித்தியமுனிவர்வானோர்நிற்குநர்நீஇப்பல்வாயி
லத்தலையொருவிக்காதமளப்பிலகடந்துசென்றாள். (௫௩)

வேறு.

என்னகத்தென்னிருந்தவத்தாலினிதமர்ந்தாளிறைமனைஞ்செய்தெழுந்
தகாலைத், தன்னகத்துச்சார்ந்தருளுந்தனையையினுந்தாயகஞ்சார்தைய
லார்போன், மன்னகத்துவகையோடும்வந்தனளென்மகிழ்வெள்ளமனங்
கொள்ளாமற், றன்னகத்திற்சொரிதலெனத்தூயருவிதுலங்கிமயந்தோ
ன்றக்கண்டாள். (௫௪)

எனையகன்றபிரிவாற்றுனென்றுதைவிளர்த்துடலம்பின்னல்கூர்ந்தான்
றனையனுமிமாற்றுதுமென்றருள்கூர்ந்துவருமவள்போற்சமீபத்தெய்தித்
தனையவன்கண்டகமகிழ்ந்தாங்கந்நிறம்போய்த்தன்னிறமேபரவச்சார்ந்
ணினைவரியசுயம்பிரகாசத்தெவையுந்தன்மயமாநிகழ்த்தும்பூவை. [தா

ஆங்ககன்றுதேவர்தினத்தொருபாதியமரர்நரராங்கட்பாதி
பாங்குபெறப்பூசனைசெய்கேதாரம்பணிந்தேத்திப்பவளவேணி
தாங்கியமாநதிசுலவவீற்றிருக்குமகிலேசன்றன்னைப்போற்றித்
தேங்குபுகழ்ச்சீசைலம்பணிந்துகாளத்திமலைசென்றுசேர்ந்தாள். (௫௫)
[வோர்

காளத்திமலைக்கொழுந்தைக்கற்பகத்தையற்பகத்திற்கசிந்துட்கொள்
நீளத்தம்பவத்துழலும்பிணிக்கெழுந்தவருமருந்தைநேர்கண்டேத்தி
மீளத்தன்றனக்குவடுதனக்குவடுவிளைத்திடவுள்விழைந்தோன்கண்ட
காளத்தன்றனையிறைஞ்சிக்கம்பமகன்றம்பையுளங்களிப்பச்சென்றாள்.

இன்னபல்லிடங்களெல்லாமியனெறிக்கண்டிணிதேத்தியிமயமீன்ற[றப்
வன்னைதிருத்தொண்டைநாடகன்றடியர்தொகைக்குவிரிவகிலம்போற்
பொன்னையையினுலகெலாமென்னுமுதல்கொண்டியற்றும்புனிதர்பல்
காற், பன்னுறுசீரனபாயன்மரபினர்தந்நீர்நாட்டின்பாங்குசேர்ந்தாள்.

அந்நாட்டிற்காருயிராயமலமதாயருண்மயமாயண்டமெங்கும்
விண்ணாட்டிமறைதகரவித்தைதிகழிடமிதெனவிதந்தசீர்த்தாய்ப்
பண்ணாட்டிற்குரியபவித்திரமாம்பொன்னம்பலத்திற்பரமன்மேவி
முன்னாட்டிண்புலியரவுக்கியற்றுநடங்கண்டிறைஞ்சிமுதமீக்கூர்ந்தாள்

அப்பதியினேகியிளஞ்சேய்மணத்திலெவ்வெவர்க்குமமலமோக்க
மப்பதியவருள்பதியுமம்மதலைக்கருண்முலைப்பால்வள்ளத்திந்த

வொப்பதிகமில்பதியும்வயித்திரைர்மண்மருந்திந்துயிர்கணேயின்
வெப்பதிறுத்துடனிறைப்பச்சேயரசுபுரிபதியும்விழைந்துபோற்றி. ()

சாயன்மயிலுருக்கொடுமுன்றுன்போற்றுபதியும்பலதலங்கள்பாங்க
ராயசுற்றலயமாகவங்கணிடையமர்பதியுமாரூர்ரும்பத்
தேயவிருந்திருப்பதியுமாலூரமுமால்புரமுமிகுந்துமேலாந்
தூயபதியிதுவேயென்றிறைவருமூலப்பதியுந்தொழுதுபோற்றி. (சக)

[த்
படர்வேணிப்பரித்தருன்றிப்பதமுதனீர்பரித்தனன்கொல்பரமனென்ன
தொடர்பாகநீருறுந்தொல்பதியுந்தாயெனவோர்தொடிக்கைமாதி
னடர்சூதவினைபுரிந்தவரன்பதியுமற்றுமடைந்தாங்காங்கேத்திச்
சுடர்வேற்கைவழுதிதிருநாட்டிமயமலையுயிர்த்ததோகைபோந்தாள். ()

[தாய்
பத்தனமெவ்வெவற்றினுமின்பத்தனஞ்சார்வனங்களெலாம்பல்குஞ்சீர்த்
நத்தனயனுணர்வருமந்நிலைமையொரீஇநத்தனமென்னடைப்புன்மூரன்
முத்தனமென்முகாம்புயத்தான்முத்தனத்தான்முத்தனத்தமுளரிக்தோ
ன்றி,யத்தனகவருண்மேனியத்தனகம்மதிவேணியண்ணன்முன்னுள். ()

வளர்கைலமலைதணந்துவந்துதனைமனந்தருளும்வகைமூவாண்டி
னிளமகவாய்ச்செழியர்குலமீடேறவுலகமெலாமின்பமேற
வளியொடுதான்முடிகவித்தாங்கரசுபுரிந்தருள்பதியையடைந்துநாதன்
குளிர்மலர்ச்சேவடிபணிந்துகுலவுமிமாசலையுவகைகூர்ந்துபோந்தாள் ()

சேவணத்தன்சேவணத்தன்றிருவடிபார்இளைப்பகிலங்இளைப்பச்சென்ற
மாவணத்தன்மாவணத்தன்சமழ்ப்பமறையவரவைமுன்வந்துநீட்டு
மாவணத்தனுவணத்தனிச்சொலரசோதுபொழிலண்டமேவும்
பூவணத்தன்பூவணத்தன்பொன்னடிபோய்ப்புரிந்திறைஞ்சிப்புறம்பு
[போந்தாள்.

வேறு.

ஒருவாதனகவேதமுடியோதுபதியாயவுமைநாதனைக்
கருவாதனகடோர்முயிரோதியொழிவானுள்கரைவாசக
மரு*வாதனகவோதுபெருமான்முனவதாரவளமேவிய
திருவாதனகர்நாதனடிபேணிமுதமோடுசிவையேயினள். (சசு)

வேறு.

இத்தகவுடனிந்நாட்டினிற்சிவபுரிகள்வேட்கை
யுய்த்திடமுழுதுமேத்தியுத்தமனுரைசெயாற்றிற்
புத்தலரிதழிபூத்தபொற்புறுவிபினமாட்டி
னுத்தமியணிகணேக்கியுற்றனளடியர்போற்ற. (சஎ)

அண்ணியவமலைகேட்டங்கலர்க்குழன்முகிலின்கூட்டம்
வண்ணவாய்க்கோபவீட்டமணிநகைத்தளவினீட்ட

* ஆதம் - விருப்பம்.

நண்ணுறக்கண்டுதோகைநடிக்கநன்னிமித்தநாமிங்
கெண்ணியகருமம்வாய்த்தற்கெனவிரைந்தேகினாளால். (சஅ)

அரிக்குரலளியின்றாரியணியமர்கணியிருல்க
டெரிக்குநற்பிரமதாளம்யாள்முழவாகத்தீப
விருக்கமோர்கானின்றுடல்விழைந்தபிற்கண்ணுளாகச்
சரிக்கையெம்மன்னைநோக்கிச்சாற்றருமுவகைகூர்ந்தாள். (சகூ)

வனமகள்கிள்ளைமாலைமகரிகைபனித்தாழுந்தீங்
கனியபன்மணிப்பொற்பூரகடநிரைமுதலதாங்கி
நனிமுகமலர்ந்துபூத்தூய்நாண்மலரடியிற்சென்னி
குனிதரவணங்கியேற்பவுவகையுட்கொண்டுசென்றாள். (ரு0)

அருளிலாவுலோபர்செல்வமவரனுபவக்குமாகா
மருளுமாபிறராற்கொள்ளப்படுமெனல்வயக்கியாங்குக்
கருமுசுவொன்றிறுத்தகைத்தளிர்வளார்கொண்டீக்கள்
வெருளியவடித்திருல்கள்பிழிந்திடுவிதநேர்கண்டாள். (ருக)

பிழிமதுக்கடங்கொள்பூகமடலுறப்பெருக்குமந்தி
தழுவுபல்குருளைக்கீதறன்புரியறத்துளொன்றாய்க்
கழியிவறன்மையோரைக்கடிந்தவர்பொருளறத்தின்
வழிபுகுத்துய்வுகாட்டுமாண்பினர்செயலாய்க்கண்டாள். (ருஉ)

ஊடியபிணாவினுள்ளமுவப்பவாகினியின்றேற
லோடியகனிகீண்டங்கையொழுகியவிரதமுன்னின்
றீடில்பொற்சுனைகண்மந்தியீந்திறைஞ்சிடலையான்றோர்
நீடுகைச்சொன்னதானஞ்செய்பவர்நிலையிற்கண்டாள். (ருங)

உழைவயாநலிவுநோக்கியுழுவையுள்ளுருகிமுன்போய்
விழைமருத்துவஞ்செய்தீனும்வெண்மறிநாளத்தோடு
தழுவிநாத்தைவந்தாசுதவிர்த்தமுதருத்துமேன்மை
யிழைநுசுப்பிமயப்பாவையினிதுளமுவப்பக்கண்டாள். (ருச)

குளிர்கொலும்விடம்பெறக்காகோதரக்குருளைபானு
விளவெயிலிடைநின்றாடவின்னலுற்றனவென்றெண்ணிக்
களிமயில்சிறைகவிப்பக்கவுழனுளொழுக்குபாலார்
நளிர்கமுகிதழ்கொணர்ந்துநயந்துடனூட்டல்கண்டாள். (ருரு)

வேறு.

இவ்வகைப்பலமாக்களங்கேயபுள்
செய்வகைப்பலசெய்கையுமேனைய
தெய்விகத்தசிறப்புமடைந்துளோ
ரெவ்வநீக்குமைகண்டுகண்டேகினள். (ருசு)

அம்பொற்கொன்றையலரிதழ்மல்கலோடும்
செம்பொற்பூரியத்தானமத்தேவியை
யிம்பர்க்கண்டமுதாயுண்டிமைப்பிலா
தும்பர்க்கொத்தனராங்குறையுத்தமர். (௪௭)

உருப்புத்தூர்த்துயிரின்புறவுள்குவார்
விருப்புத்தூண்டவிணைவொடுமேவினோர்
கருப்புத்தூரிற்கழிவுறுத்துமிழ்
திருப்புத்தூரெனுஞ்செவ்விவனத்தகம். (௪௮)

ஆயகானனமேவியவன்னைதான்
றூயமாதவஞ்செய்யத்தொடங்குழு
னேயமாதவஞ்செய்குநரிம்முறை
வாயகாவனிறுவன்மாமெனா. (௪௯)

வேறு.

உலகினுக்குணர்த்துவாளா*யும்பலான்வம்பலாற்றிற்
செலுபுதன்சத்தியாயசேட்டையைவானமாதி
யிலகுசத்திகளோடங்கவொன்றனைக்குரோசத்தெல்லை
நிலவுறுகம்பையூரினிறுவினுணிமலைபின்னர். (௫௦)

தெக்கணந்தனிற்குரோசமொன்றனைச்சென்றுமுன்றுன்
முக்கணன்சித்திபெட்டெழுவிருமகளிர்க்கோதப்
புக்கணவால்சேர்பட்டமங்கையிற்பொருவில்ஞானி
யிக்கணமிருக்கென்றேற்றியிருத்தினளாங்கன்றேனா. (௫௧)

செப்புமொன்றனைக்குரோசத்திடைப்பிரதீசியாசை
யொப்பிகலாலங்காட்டினுற்றுறைவியுறிப்புட்கொங்கைத்
துப்பிதழ்க்குதலைத்திஞ்சொற்றுடியிடைக்குமாரிதன்னை
யிப்புவியமர்தியென்றேவிமாசலைநிறுவினாளால். (௫௨)

வடதிசைக்குரோசமொன்றிலெனுமெறைப்பதியின்மன்னிக்
கடிசெயவாறுகோடிகன்னிமார்தமைநிறுத்தி
மிடைமலரிதழிக்கானின்மீளவும்புகுந்தெமன்னை
படிதொழவிருநாலாகையிலிங்கமும்பணியச்செல்வாள். (௫௩)

பூருவதிசைக்குரோசமொன்றினிற்பொருள்களொளிற்
சேருபுமுகிற்றெழிற்செய்தென்கரைப்பதியின்மேவிச்
சாருவபோகம்வீடுதந்தருள்சயம்பிலிங்க
நேருறீஇயன்புகூரநிலமுறப்பணிந்துபோற்றி. (௫௪)

---

* உம்பலான் - இந்திரன்.

குலவியவாசைவீதிகோத்திரங்*கவ்வியூதித்
தலையமர்|பெரிசையென்னுந்தண்பதியதனின்மேவி
யலைநிகர்பிடற்றெம்பெம்மானருட்சுயம்பிலிங்கந்தன்னை
நலனிறையன்பிற்கண்டுநயந்தடிபணிந்துபோற்றி. (௬௫)

யாமியதிசைக்குரோசமொன்றரையெல்லையேயுத்
தேமலரளிகள்கீதஞ்செய்பொழிற்கோயிற்பட்டி
யாமகன்பதியின்மேவுமருட்சுயம்பிலிங்கமூர்த்தி
தாமரைபுரைமென்றாளிற்றலையுறப்பணிந்துபோற்றி. (௬௬)

நிருதிதன்றிசையிற்கவ்வியூதியினிலவுங்கோட்டித்
திருநகர்மணிமுத்தாற்றின்றென்கரையதனின்மாயோன்
வருமகபதிகதம்பமுனிமுதலோர்வழிபட்டேத்துஞ்
சுருதிசூழ்சுயம்பிலிங்கமூர்த்தியைத்தொழுதுபோற்றி. (௬௭)

மேற்றிசைக்குரோசமொன்றின்விளங்குநற்காரையூரிற்
போற்றுசீர்ச்சுயம்புவாகப்போந்தருள்கணேசமூர்த்தி
யேற்றுசண்டேசமூர்த்தியிருவரும்புடையின்மேவ
வீற்றிருந்தருள்சுயம்பிலிங்கத்தைதவிழைந்துபோற்றி. (௬௮)

பச்சிமோத்தரத்தின்பாலோர்குரோசத்திற்பரவுநல்லூ
ரிச்சையினேயோங்கனிலங்கருட்சுயம்புவாய
விச்சைமாவடிவிலிங்கமூர்த்திமுன்மேவியன்பா
னச்சிமென்மலர்கடூவிநலனுறப்பணிந்துபோற்றி. (௬௯)

உத்தரதிசைக்குரோசமொன்றினிற்வேதவோசை
நித்தலும்பரவியோங்குநெடுமறைப்பதியில்யாமு
மத்தருபிருகுநாகர்குசகேசராதியோரும்
பத்தியினிறைஞ்சியேத்துஞ்சுயம்புவைப்பணிந்துபோற்றி. (௭௦)

வடகிழக்காசையின்கட்குரோசமொன்றரையின்மாயோ
னிடரகன்றின்பமேவுற்றெண்ணிவந்திறைஞ்சியன்பா
லடைவினிற்பூசித்தேத்துமரிபுரமதனின்மேய
படரொளிச்சுயம்புமூர்த்திபதமலர்பணிந்துபோற்றி. (௭௧)

இன்னணமிமயமீன்றவிடுமிடையிணைத்தகொங்கை
யன்னமென்னடைப்புன்மூரலளிமுரலலங்கற்கோதை
தன்னமர்காதலான்றன்சுயம்பிருநான்கும்போற்றிப்
பின்னரவ்விதழிதுன்னும்பெருவனம்புகச்சென்றாளால். (௭௨)

---

* கவ்வியூதி - இரண்டுகுரோசம்.
| பெரிச்சியூர் - பெரிசையெனமரீஇயது.

மலைமகள்வரவுநோக்கிவனமகள்மரகதத்த
நிலவுநீன்மணிகால்யாத்தபொற்றுடைநிரைவிதானங்
குலவுறவமைத்தல்போலக்குளிர்தளிரிடைவண்டூது
மலர்துணரலங்குகொன்றையடவியினகம்புகுந்தாள்.          (எங)

ஆங்குறுமிமயச்செல்வியனாதியாயவனியெங்கு
மோங்குபல்சயம்புக்கெல்லாமூலமாயுன்னியாங்கே
யாங்கினர்க்குதவுமூலவிலிங்கமப்பசியகானிற்
றேங்கொளிவிரிப்பக்கண்டாளன்புளஞ்செலுத்தச்சென்றாள்.          (எச)

உருவெனவருவமென்னவோதொணாதுபயமாகுந்
திருவருளாகிவான்சச்சிதானந்தமாகிச்சிந்தைக்
கருணிறத்தாதுமுற்றும்வலித்தருள்காந்தமாகி
யருமையினேகமாகியமர்ந்ததிங்கென்றுவண்ணால்.          (எரு)

என்றினிதன்பின்வாய்மையின்னனபலமுன்னோதி
மன்றலங்கோதைபாதமனையளிநிரையிற்சூழ்ந்து
துன்றிய*நமந்துபல்காற்றுணைவனோடலர்வாசம்போ
லொன்றுதலுருவினுங்காண்புறத்தழீஇயுவகைகூர்ந்தாள்.          (எசு)

பண்டுநற்கணங்கள்வேண்டப்பரன்கழுக்கடையாற்கண்ட
மிண்டுறுபவமுற்றோட்டிவீடருள்சிவகங்கைப்பேர்
கொண்டமர்வாவியன்னகுறிக்கெதிர்குணக்கிற்றோன்றக்
கண்டுசென்றனையதீர்த்தக்கரையின்மேற்கெளரிநின்றாள்.          (எஎ)

நின்றருளமலைபாதநேருநீஇயனந்தனாதி
வன்றிறனகர்வீழ்ந்துவணங்கினரெழுந்துநின்று
ரன்றவடிருநோக்கன்னோரடைந்திடப்பெற்றாற்று
னன்றிசெய்வாக்கையுற்றார்நயந்தருதுதிகள்சொற்றார்.          (எஅ)

மூலகாரணியாய்த்தோன்றுமுக்குணரூபியாகிச்
சாலவின்பருளுஞானசத்தியாயிச்சைதானு
யேலுறுசெயலியற்றுமிறைவியாயிறைவற்கேயுங்
கோலங்கட்கியையநிற்குங்கோற்றொடிபோற்றியென்றார்.          (எகூ)

போற்றியகாற்றுணைக்கொள்புயங்கர்கடம்மையம்மை
யாற்றுநல்லருளினோக்கியகிகணீரலந்தையீதி
னேற்றதென்னெண்ணமென்கொனுவலுதியொன்னவன்னோர்
பாற்றகவுடையனந்தன்பதம்பணிந்திளையபன்னும்.          (அ0)

வனந்திகழ்முகிழக்கொங்கைவரிவிழிவளைக்கைவாழ்வே
கனந்திகழ்கண்டர்பாதமுடிக்கொளக்கருதினாயே

* நமந்து - பெயரடியாகப்பிறந்தவினையெச்சம்.

னினந்திகழடியர்போற்றுங்*கமலையிலிறைவற்போற்றி
மனந்திகழ்தரமுன்னேற்பமதிமுடியெதிர்வந்தென்பால். (௮௧)

காண்டருமலர்த்திருத்தாள்காட்டினன்களிகூர்ந்தெந்தாய்
சேண்டவழ்திங்கள்வேணிச்செல்வநின்றிருத்தாள்சென்னி
பூண்டிடவிழைந்துளேனாற்புரிந்தருள்புனிதவென்றே
னேண்டகுதவநீயின்னுமியற்றுதியெய்துமென்றான். (௮௨)

இனியெவனேற்பதென்னவெந்தைவாசுகிகார்க்கோட
னிவைபுநந்தாண்டவத்தைநின்றெதிர்காண்பான்கொன்றை
வனமிசைமடுவினேற்பார்மற்றவர்நாப்பண்மேவி
நனிதவம்புரிதியாங்குநாமுமைபொருட்டுப்பின்னாள். (௮௩)

கௌரிதாண்டவஞ்செய்வோமக்காலைநின்மகுடநம்பொற்
றிவியகுஞ்சிதத்தாள்சூடச்செய்துமென்றருளிச்செய்தா
னவனருடலைக்கொண்டிங்ஙனடைந்துநோற்கின்றேனன்னே
யெவமகன்றின்புற்றேனின்னிணையடியிறைஞ்சப்பெற்றேன். (௮௪)

அன்னைநீயீண்டுப்போதற்கருந்தவம்யாதுசெய்தேன்
முன்னுகுஞ்சிதத்தாள்சென்னிமுடிக்கொளநோற்றதல்லா
லென்னையிங்கருளவுன்னிவெளிவந்தகருணையென்னே
பொன்னலரிதழிவேய்ந்தோன்புரத்தொருங்கமருமின்னே. (௮௫)

அண்ணனின்பொருட்டிங்காடலறைந்தவாறுனைக்காண்பேற்று
லெண்ணியானேற்றபேறுமெய்தியதின்றேயென்பா
னண்ணுகார்க்கோடனுதிநாகருங்குலமுமுய்ந்தோ
மண்ணுமுற்றுய்ந்தவென்னவணங்கிநின்றிவைதுதிப்பான். (௮௬)
[யு

வேறு.

விரிதலைக்கான்செயலொளிமாய்விசும்புநெப்பிலறல்பானுவிதுமுன்மா
மிருளரன்முன்வலியின்மலமெத்தென்னுவிதழிமுதல்யாவுமோட்டிப்[இ
பரனுருவிற்பாதிகொள்பான்மைக்கிணங்கவவன்சடைநாற்பயோதரத்
னிருமுகிணீபகிர்ந்தணிந்ததெனவகிர்கொண்டிலங்களகத்தியல்புபோற்
[றி.

இருளினைநின்றனையின்யாமிரிப்பவினம்பற்றிவெகுண்டெம்மைவாட்டு
[ங
இரிசைநினதோதியெனக்கிளத்தவருமிருசுடராக்கெழுமுசேற்றங்
திருகுபுதன்காற்பிணித்தசெயல்காட்டிமிரண்டணியத்தேசமென்னா
வருதாளவரதனநன்னுதலணிகள்வயங்கோதிவனப்புப்போற்றி. (௮௮)

இருகுயினைப்பட்டடித்தொன்றென்றுமழியாதிருந்தாலேய்ப்பதாய
பொருவரியசிந்தூரப்பொடியொழுக்குசீமந்தரேகைபோற்றி

---

* கமலை - திருவாரூர்.

பருமதிசாபக்கிரங்கித்தாதைமேன்முனிவுகொளிஇப்பாதியால்
வருமளவிற்றன்பால்வைத்தருளினன்கொலென்னுமுலகன்னைநுதல்போற்றி.

இருபுறத்திலொதுங்கிவகுப்பெய்துங்குழலொழுங்கிற்கிடங்களாக
வருநிரைக்கொளிரண்டாலவாலமேயிடைமறைந்தவைகையாகுஞ்சினி
னருநிலத்தாம்விந்தமதிமண்டலத்தினிறைநற்றெழுப்புருவமேல
பெற்றுவறப்பொங்குதலினணப்புகன்றுகேதிறுத்துமொளிர்புருவம்போற்றி.

கரமிசைநாந்தரித்திடுநற்கழைச்சாபமலர்ச்சாயகங்களாதி, வரமுறக்
கொண்டேற்றுணையெரித்தானையுமியவிந்தும்மதனைநம்பான், மருவுற
வைத்திடுமவன்வலியடைந்துவெல்கவெனவளித்தாள்கொல்லென
றுரைசெயவப்பரமனுளங்கவர்ந்தொளிருந்திருவிழியிணையும்போற்றி.

ஆயமதனுங்கொளியவணிலைவாதனத்தினமர்ந்திட்டாங்கு
மேயநவியன்கறுப்புமிளிர்மணியுமெனவெண்டாளவிதானம்வேய்ந்த
சேயமணிச்செய்தொடையிற்றிகழ்கடையுஞ்செவ்வரியுஞ்செப்பும்வாயிற்
கேயநிரைத்தோரணத்தினிலங்கிமைசார்ந்திடுரோமத்தெழிலும்போற்றி.

குலவளிகட்குணவளியாக்குறித்தனுகவேனும்விடாக்கொடியவாகி
நலனறுசண்பகமிழித்துநயனவளியருகமராநங்கூர்ந்தென்று
மிலகுகரோற்பலத்தளிகளெழுந்தாடிக்களிகூரவியல்பிற்றோன்றி
யுலவுகுளிர்மணங்கமழுமுயிர்ப்பெறியுந்திருநாசியுருவம்போற்றி. (கூ)

விருப்பூரங்காசியின்மூரற்கிடைக்குபரிபவத்தால்விழுமமிக்கூர்ந்
தருப்பூரவாற்றுதுநான்றிறப்பநேருற்றுங்கொளிர்முத்தோடுங்
கருப்பூரமாதிவிராய்க்கமழ்வீடிகையிற்பொலிந்துகருப்பமெட்டுந்
திருப்பூரமணங்கான்றுசெவ்வாம்பல்வெள்ளாம்பல்செயும்வாய்போற்றி.

முல்லைமுறுக்கவிழ்ந்துடையமுருந்துவமைநிலையுமென்முதற்கயற்க
ண்ணல்லுகரமிகரமாய்ப்பிறந்தகத்தூர்த்தனுமிஇநலியத்தன்பாற், புல்லுபத
முருவழியப்புதுவயிரஞ்செம்மணியாற்புணர்ந்துவைத்தா, லொல்லுமெண
வியற்கைசெயலொளிகான்றுமிளிருநகையொழுங்குபோற்றி. (கூரு)

அரனுருவின்பாலேயாருமெனல்பிரத்தியக்கத்தறிவித்தாங்குப், பரவு
முத்திபுத்திவிழைபவர்க்கருளும்வலத்திடத்தப்பரமன்சாயை, விரவுறக்
காண்டருப்பணமாங்கபோலமுங்கட்கயலொடுபோர்விளைப்பத்தன்பால்
வரிமகரங்கொண்டெனவப்பெயர்ப்டணிகொடிருச்செவியின்வனப்பும்போற்றி.

இருகார்களிருதனுக்களிருகிடைகளிருவளைகளிருசகோர
மொருகாமருப்பிவிம்பமொன்றுபிறையொன்றுமுகிழொன்றுமெனவ
ணிரைமேவுமாமதியொன்றுளதாகிலொருவாறுநிகர்த்தியாண்டுந்
திருவாருங்கருணைதொடர்பின்றியெழுந்திருமுகமண்டலச்சீர்போற்றி.

பணிலமெலாமிகவலறிப்பயமருவியுடல்வெளுத்துப்படருற்றேங்கத்[ழுந்
திணியகல்பூகதங்கண்முத்தஞ்சிந்துபுவிண்விரைசெலவிற்சென்றுநின்
தணிவில்சதாகதியலைப்பத்தள்ளாடித்தலைவிரிந்துநடுங்கச்சாடி
யணிதிகழ்மூவரையுமடுத்தமைந்திலகுதிருக்களத்தினழகுபோற்றி. ()

நீண்டளவேசிறுதிவலைதிருப்பூட்டுமங்கலமுற்சிதைக்குமாற்றல்
பூண்டவிடமொருங்கயின்றும்பூதேசன்மாதேவன்புரையின்றோங்கற்
ஈண்டுநிபமாயோகரூடியின்மங்கலநாமமியல்பிற்றாங்கி
மாண்டருபல்லணிக்கரசாய்மலிதருணமங்கலநாண்வண்மைபோற்றி.

அருந்தவஞ்செய்தானுமிணையாருமெனவடுக்கலுறீஇயமர்ந்துவேய்தான்
வருந்தவியலாதுணக்குமதித்தகளைவருந்தலைமையென்னுமாற்றந்
தருந்தகையினப்பெயர்கொண்டதுதணியத்தனக்குவமைதானேயாக
விருந்தவிருந்திருத்தோளுமிசைபுறுபன்மணிப்பணியினெழிலும்போற்
[றி.

வளைதலுருயாத்தலுறும்வல்லகியின்றண்டிரித்துவயங்குசெச்சைக்
கிளர்நறுந்தார்வாடுதலிற்கீழ்ப்படுத்துகூர்ப்பரத்தின்கெழுசீர்போற்றி
யளகமலையரண்புகுந்தம்புயங்கோடலலைந்தென்றுமமரவோட்டி
வளர்புவனபோகமெலாமகிழ்ந்தளிக்குந்திருக்கரத்தின்மாண்புபோற்றி.

வித்துருமம்வகிர்ந்துநுதிவியன்வயிரம்பதித்தாங்குவிளங்குஞ்செய்ய
கைத்தலமார்விரனிரையுமன்னவற்றினுகிர்நிரையின்கவினுமென்மை
வைத்திலகுமேற்கோளாய்வாருணநூலிதன்பாலேவந்ததென்றே
வித்துவமெய்ச்சிரோமணிகள்விரித்துரைப்பவொளிர்வரையின்விதமும்
[போற்றி.

இன்பாவியெவைக்குமருளீசனுகர்தரவெழிற்பேரின்பவாரி
தன்பாலினமுதநிறைத்தொளிர்நீலமூடிகொள்பொற்றசும்பரென்ன
வன்பாசமறப்புடவிவந்தருளெங்குலக்காழிமணிக்குநல்கு
மன்பாருமிருஞானத்திரட்சியெனவமைந்திலகுமம்மம்போற்றி. (௧௦௫)

சொன்னமலைமணிச்சிகரந்தொடுத்திழியுமருவியெனச்சுணங்குபூத்த
வன்னமுலைத்தரளவடவணப்புங்கீழ்மலைத*னின்மேன்மலைச்செல்வானிற்
றுன்னலரிதுருவகுத்திரச்செலவினடுத்தோன்றுதோற்றம்போல
மன்னியவத்தரளவடமத்தியிற்செம்மணியாரவணப்பும்போற்றி. (௧௦௬)

விண்டுவைமாத்திரங்கொள்வடதளிர்விலக்கிமூவர்முதல்விபுதரோடு [ன்
மண்டமெலாந்தனில்வகித்தப்பவஞ்சமறிவறிவிலபாத்தமைத்ததேகொ
மண்டுசராசரம்பிரித்தவரம்புகொலெனமயிரொழுங்கும்வகைமூன்றுவி
கொண்டமைதேற்றுதல்போன்மும்மடிமிலகுதிருவயிற்றின்கோலம்போ
[ற்றி.

* இன்-ஈண்டு நீக்கப்பொருட்டாய ஐந்தனுருபு.

தற்பொறைகொள்வாளரிமுற்சமமென்பமுழுதடக்கிச்சத்தாயாண்டு
நிற்பினுமிக்கன்பினருந்தவர்க்கலதுநேர்தோன்றாநிமலன்பன்னா
ளற்பினெடுந்தோல்வேணியாதிபுனைந்தாற்றுதவத்தாலன்னாற்கே
பொற்புறுகைப்பரிசத்தாற்புலனாகியுளதாகுருசுப்புப்போற்றி. (௧௦௬)

தேவரொவ்வோருறுப்பாம்வைதிகத்தேரச்சிறவூர்ந்தவெனையங்க
மாவதொருதட்டானேவேறுமெனவதுகொண்டாங்கணிகளார்ந்து
மேவுறுசீர்க்கடிதடமும்வென்றுநிறுத்துரோமநிரைவிசயத்தம்பந்
தாவறநேர்குழியின்வலஞ்சுழியினமர்திருநாபித்தலமும்போற்றி. (௧௦௭)

ஈற்றினுற்பாதத்தரலென்றேற்றினுவப்பின்றியிணைந்திர்வாடன்னா
லாற்றுறுபஃறுணியாகியதனுரிபட்டாரந்தையுறவரம்பைவீட்டித்
தோற்றுபுழைத்தூசலினொடொறுமலைந்துதண்டமுறச்சண்டமாட்டி [றி.
மாற்றுயர்பொன்னாற்றேர்க்குவாழைநிறுத்தாங்கொளிர்கவானும்போற்

பங்கமுருச்சலமருவிக்கால்கவைப்பவோடியளைபதுங்கித்தன்னை
யங்குநினைந்திணைந்தலவனதனாலேநடுங்குகுளிரடைந்துநாளுந்
தங்குதலினதுபெயராய்ச்சார்ந்திழியப்பவனெருண்டந்தாந்திலோடத்
துங்கமிகுமியலெழிற்குத்துணைவேறின்றொளிர்சானுத்துணைகள்போ
[ற்றி.

கண்ணிணையாற்கயல்புகுதுங்காரகமேதன்பாடிகாவலாக
நண்ணிவராலலைந்துவெள்ளத்துள்ளுநின்றுநிலையின்றிகலியவாவந்
திண்ணியர்முன்னில்லாதுபின்னின்றுபிணிப்புண்டுதிறலேசெய்வன்
கண்ணினவம்புக்கிடனாய்க்கடைப்படவென்றோங்கிநிகர்கணைக்கால்
[போற்றி.

எத்துணையுமுணர்ந்தாருமியற்கருவியாலளந்தேயிதல்போல
நித்தியமாருயிரொவைக்குநிகழ்கன்மபலமொர்தட்டினிறுவிப்போக
வத்துவொருதட்டினிறீஇவழங்கியநின்றிறப்பதுதாமரைகடம்பால்
வைத்துளபொற்றராசுகொலென்வகையமைந்தமணிப்பரட்டின்மாண்பு
[போற்றி.

அறனிறைநின்றைந்துமகமடக்குபுநோற்றானுநிகராதுமென்றாங்
குறுகமடப்புறவடியுமுளமொருங்கநோற்றல்புறவுறுப்பினாலுங்
குறிதரவைந்தும்மொருபாற்கொண்டனகொலெனச்சாரங்குலியுமாங்க
ணிரைதரளமவற்றினுதிநிரைத்துவைத்தாங்கிலகுமுகிர்நிரையும்போற்
[றி.

பழுதணங்கல்குவிதன்முதற்பளகொன்றுமின்றியண்டப்பகுதியாவும்
வழுவில்வியாப்பியமாகமலர்ந்தருட்டேன்பிரவிப்பமணந்தெருண்ஞான்
றுங், கழிபுலவிக்காலரன்செங்கரத்தொளியும்புறங்கொடுப்பக்கடிந்து
கண்ணீர், மழைபொழியுமன்பருளமலர்த்தடஞ்சார்திருவடித்தாமரை
கள்போற்றி.
(௧௧௩)

அண்டர்பிரான்புலவிதணிப்பான்றொழுமப்பதமறையோனுமராளம்
பண்டுமுடியண்டமெலாம்பறந்துழன்றுங்காணாதுபரிந்ததின்னாட்
கண்டனமக்கண்ணுதல்சேகரமெனமாமறையெகினங்கலித்தல்போல
வண்டரளமாமறைநூபுரமிசைக்குமருளொலியின்வண்மைபோற்றி.

ஆரமரிகண்டுகனியான்பாறேன்கழைமுதல்வேம்பாகவீணை
சாரியைசார்பெயராகச்சாரிகையேகாளகண்டந்தத்தைவேயின்
சீர்கொடியதாகவரன்றிருவருட்பாவினிற்பேர்லத்திகழ்பேரின்பஞ்
சாரவருள்பழுத்தொழுகுதண்குதலைமழலைமொழித்தகுசீர்போற்றி.

பேட்டனமும்பிடியுமலர்ப்பிரமனார்பெருங்கானிற்பேதுற்றோட
வாட்டுமெழில்வாய்நடையுமயிலுடைந்துமகற்சுமப்பவைத்தவாய்மைச்
சேட்டியலுந்திருந்துமியற்றிருமேனித்தெய்வமணச்சீரும்போற்றி
தேட்டமெலாஞ்சிறப்பவருள்சிவகாமசுந்தரியென்றிருப்பேர்போற்றி.

வேறு.

என்றரவிறைதுதிப்பவிமாசலையெம்பாலன்பா
னன்றுநீபுகன்றவிந்தநற்றுதியினிதுவந்தே
மொன்றியவன்பினோடுமுவரெவரவரிவற்றை
மன்றவிங்கினிதுவாழ்ந்துமறுமைவீடடைவர்திண்ணம். (௧௧௭)

அனந்தநீயமலனந்நாளறைந்தவாறடுத்திவ்வெல்லை
நனந்தலைமுன்னரேபோனயந்துநோற்றமர்தியெம்மா
னினைந்தரவனந்தரம்போந்தெண்ணியாங்கருளுமென்னாத்
தனந்தனிநின்றோர்காணுந்தற்பரையேவிப்பின்னர். (௧௧௮)

பங்கயமலரிற்சேக்கும்பகவன்மாலாதிவானோர்
தங்கரஞ்சென்னிகூப்பித்தாழ்ந்தருச்சனைசெய்தேத்தி
யெங்களையருடியன்னேயென்னநின்றிரப்பநாளு
மங்கலமளிப்பாள்பாங்கர்க்கூளியர்வதனநோக்கி. (௧௧௯)

மீண்டுநாமீசன்பூசையியற்றுதற்குரியவாக
வேண்டுபகரணம்யாவும்விழைதரக்கொணர்மினென்னாத்
தூண்டினடன்பால்யாவுந்தோற்றிவைத்தருளும்வாய்மை
பூண்டவெம்பிராட்டியாவிபோற்றியபுரிந்தீதாற்றும். (௧௨௦)

தவமதற்குரியவங்கநானமேதருப்பணாதி
யவைதமக்கேதுதீர்த்தமாகுமென்றமலையெண்ணிப்
பவன்மலர்க்கரத்தின்மேவும்பரசினைநினைவிற்கொண்டா
ளவிர்மழுப்படையாங்கெய்தியடியிணையிறைஞ்சிற்றம்ம. (௧௨௧)

* அப்பரசதனால்யாவுமாடினர்க்களிப்பதாய
திப்பியதடமொன்றாக்கிச்சிவன்முடிச்சசிமேற்சிந்தை

வைப்பவக்கங்கையாண்டுவெந்தனளன்னவாவி
யிற்பயனிறைத்துத்தூய்மையியற்றிடவிமயப்பாவை. (கஉஉ)

அத்தகுமேல்லைதன்னினருளிஞன்மாபிறுடி-
நத்தெறிதிரைநீர்வையநவிற்றியகாட்டுவாளா
யுத்தமமுனிவர்வானோரிரவிமுன்னவர்க்குள்ளோரை
பொத்தவம்மனுக்களோதித்தரும்பணம்புரிந்துபின்னர். (கஉங)

கூந்தலைவேணியாக்கிமரவுரியுடையாக்கொண்டு
வாய்ந்தபைங்குசையினாயபவித்திரமலர்க்கைபூண்டா
ளாய்ந்தசாபாலத்தங்கியாதியாயைம்முகத்திற்
போந்தவம்மனுக்களால்விபூதியுத்தூளஞ்செய்தாள். (கஉச)

உத்தமவங்கநெற்றிமார்பகமுந்திசானு
னைத்தலங்கண்டமுன்னாக்கவினிலையங்கமெங்கு
மெய்த்திரிபுண்டரங்களணிந்தனள்வேதகெற்ப
முத்தியைந்தெழுத்துஞ்சானமுறமுறைசெபிக்கலுற்றாள். (கஉரு)

வேறு.

தேவிமுன்னருள்பணிசேக்குஞ்சென்னியர்
சேவடியிணைமலர்சேக்குஞ்சிந்தையர்
மேவியபரிசனர்குழாங்கள்வீற்றுவீற்]
றுவருபொருளெலாமடைவினீட்டுவார். (கஉசா)

போகிதனுலகினிற்போகியைந்தரு
வாகமர்மணிநிதிமருந்துதேனுமுன்
னாகிய*தெவ்விமீண்டவணிபுக்கவ
ரோகையினொருபுடையுறுவிப்பார்சிலர். (கஉஎ

மயனைமுற்கூவியொண்மணிபொன்றியாற்
பயனிறைவட்டகைகரகம்பாசனம்
வியனுறுமஞ்சனகடமுன்மேதகு
நயமிகுபொருள்பலநவில்கிற்பார்சிலர். (கஉஅ)

ஐந்தருவாதியிலாரங்கண்டிகை
யுந்தொளிக்கோளகையோதுகங்கண
மூந்துபொன்மகுடங்குண்டலமுன்னாயவு
வந்தனர்கவர்ந்தவண்மலிவிப்பார்சிலர். (கஉகூ)

திரனுறுநந்தைபத்திரைசுசீலையே
சுரபிசுமநசையென்பெயரிற்றுய்யகோ

---

* தெவ்வுதல் - கவர்தல்.

புரமுறுமைவகைக்கயிலைபோதர
நிரையுறக்கொணர்ந்தவணிரைவிப்பார்சிலர். (கநo)

உலகிலெண்*ணும்பரினும்பரிம்பரி
ணிலவுபஃறிரத்தமுநிரம்புபொற்றகும்
பிலகுவாய்த்துகிலொடுமணிந்திருத்தியாங்
கலைவறநடத்திவந்தமர்விப்பார்சிலர். (கநக)

கந்தமிக்கூட்டியவைதலங்காணரி
தந்தவெண்பொடியரிசனத்தின்வண்பொடி
யுந்துமாமலகத்தினுலர்ந்தவொண்பொடி
வந்தவரோர்புடைமலிவிப்பார்சிலர். (கநஉ)

அரணமர்சிவபுரக்கணியதாயகோ
புரமதிற்கொணர்தரும்பொருவிறேனுவிற்
பரவுறுபஞ்சகவ்வியமும்பாசனத்
துரனுறுமாயிடையுறுவிப்பார்சிலர். (கநந)

மரபுளியமைத்தவான்கிரம்வண்டயிர்
இருதமொண்மதுச்சருக்கரையிக்கேழ்கிளர்
பொருள்களைந்தொருங்குறப்புணர்த்தநல்லமு
தரிறபவமைக்குநராங்கணோர்சிலர். (கநச)

முக்கனியுடன்ஞெருகுமுறைசெயைந்தமு
தக்கடம்பலநிறைத்தமைப்பரோர்சிலர்
தொக்கவோதனபயந்தூயதுகில்வடித்
தொக்கநற்கடம்பலநிரைப்பரோர்சிலர். (கநரு)

தயிர்நெயினிறைகடஞ்சமைப்பரோர்சில
ரயிர்முதிரிக்குதகம்பலார்சுவைச்
செயிரறுகனிகளினிரதந்தெங்கினீர்
வயினிறைபொற்கடமலிவிப்பார்சிலர். (கநசா)

நறுங்குறடரிஞ்சியதேய்வைநாணஞ்சால்
புறுங்கருப்புரம்புழுகொளியகுங்குமம்
பிறங்கிமசலமுதற்பெய்துசால்களிற்
றிறங்கெழுகலவைகள்சேர்ப்பரோர்சிலர். (கநஎ)

சொற்பகேசூரியதூயவாலரிப்
பற்பலவகையசெம்பாகச்செய்கையி
னற்புதவிதவமுதபூபவர்க்கங்கள்
பொற்புறவமைத்தனர்புலவரோர்சிலர். (கநஅ)

---

* உம்பர் - ஈறுபோலி.

